

பயணம் : 2 பதிவு :2

“ஹெரிட்டேஜர்” தமிழ் இதழினை, தமிழக மரபுசார் ஆர்வலர்கள் சார்பாக, மின்னிதழாக வெளியிடுவோர், இராஜசேகர் பாண்டுரங்கன்.

இந்த இதழின் நோக்கம், மரபு சார்ந்த செய்திகளைப் பகிர்தல் மட்டுமே. மற்ற எவ்வித ஆதாய நோக்கமும் இல்லை.


ஹெரிட்டேஜர் தமிழ் இதழ்,
தமிழக மரபுசார் ஆர்வலர்கள் சங்கம்,
26, முதல் தெரு, ராமலிங்கா நகர்,
நெற்குன்றம்,
சென்னை. 600107
தொலைப்பேசி: 9786068908

கட்டுரைகளை அனுப்ப:
news@heritager.org


முந்தய இதழ்கள்: goo.gl/AeBzaa




அட்டைப்படம்:
சண்முகப் பிரியன்
படம்: ஆனந்த சபரி தமிழி
குறிப்பெழுத்து, மாமல்லை




# வாசகர்கள் உதவிக்கரம் அளிப்பீர்




அன்பு வாசகர்களுக்கு, தையிலிருந்து நமது இதழ் திங்கள் இருமுறை இதழாக வருகின்றது. இதழ் உருவாக்கத்திற்கான பணிச்சுமையை வரலாற்றுத் தேடல் குழுவினர் பகிர்ந்து கொள்கின்றோம். எங்களுக்கு ஏற்படும் நிதிச் சுமையை எங்களோடு சேர்ந்து பகிர்ந்து கொள்ள வாசகர்களை அழைக்கின்றோம். இங்கு அழுத்தி உதவுவீர்.

Paytm
Accepted Here

Heritager Magazine

To Pay,
Scan QR code in Paytm App

India's Most Sincere Bank
Paytm Payments Bank

Paytm QR code issued by One97 communication PVT. Ltd

PhonePe

ACCEPTED HERE

Scan & Pay Using PhonePe App

or Pay to Mobile Number using PhonePe App

9786068908






**UPI ID: 9786068908@ybl**

# ஒரு காதலனின் கடிதம்

## திக்குகள் எட்டும் இரா. ஜெகதீஷ்

நான் இரா.ஜெகதீஷ், பரவலாக யானை காதலன் அல்லது யானை பைத்தியம், என்றே பலரால் அழைக்கப்படுவது வழக்கம். யானைக்கும் எனக்கும் என்ன தொடர்பு? யானை என்னை எப்படிக் கவர்ந்தது? என்பது பெரிய கதை ஏதும் இல்லை. நான் யானைக்கு உறவும் இல்லை. உலகில் உள்ள எல்லாக் குழந்தைகளுக்கும் ஒரு உயிரை பிடிக்கும் என்றால், அது யானையாக மட்டும் தான் இருக்க முடியும்.

நானும் அப்படி ஒரு சராசரி குழந்தைதான். இந்தக் குழந்தைக்கும் யானை பிடித்தது. கையில் இருக்கும் ஐம்பது பைசாவை எப்படியாவது யானையிடம் கொடுத்து அதன் ஆசிர்வாதத்தைச் சில வினாடிகள் அனுபவிக்கும் ஆசை இருந்தது. நான் சென்னையின் கான்கீரிட் காடுகளின் நடுவே பிறந்ததால் நாய், பூனை, ஆடு, சிட்டுக்குருவி , கோழி மற்றும் முருங்கை மரத்தில் இருந்து கொட்டும் கம்பளிப்பூச்சி இவைதான் இந்தக் குழந்தைகளுக்கான வீட்டு உயிரினங்கள். பள்ளி செல்லும் போது மாடு, விடுமுறை நாட்களில் வண்டலூர் அல்லது கிண்டியில் உள்ள உயிரியல் பூங்காகளை, மன்னிக்க வேண்டும் கானகத்தைக் கண்ணில் காட்டுவார்கள். காட்டு விலங்குகள் எல்லாம் கூண்டிற்குள் அடைபட்டு மனிதன் தரும் உணவிற்காகக் காத்துக் கிடக்கும். இந்தக் குழந்தைக்குத் தெரிந்ததெல்லாம் மானிற்கு டைகர் பிஸ்கட், முதலைக்கு ஆட்டின் இறைச்சியும், புலிக்கு சில பல துண்டுகள் தருவார்கள் போலும் நம் தட்டில் உள்ளதை போல இவ்வளவே என் உலகம்.

திடீரென ஒரு கூச்சல், "யானை வருது, யானை வருது" என்று என்னவாய் இருக்கும்? என்று எட்டிப் பார்த்தப் போது தொலைவில் ஒரு மலை நடந்து வந்து கொண்டிருந்தது. மிரட்சி, பயம், ஆச்சர்யம், விரிந்த கண்களோடு இமைகள் பார்த்த நொடி இன்றும் கண் முன் வந்து இமைக்கத் தயாராக இருந்த இமைகளை மிரட்டி செல்கிறது. மொட்டை மாடியில் இருந்தும் உடல் நடுங்க வீட்டின் அருகே வந்து நின்ற யானையைக் கண்ட நொடியை என் பிணம் கூட எழுந்து சொல்லும். ஆம், யானை தான் இந்த அண்டத்தின் பேரண்டம், யானை என்ற



ஒற்றைச் சொல் போதுமானது. உலக விலங்குகளை, மனித மிருகத்தையும் சேர்த்தே தான் சொல்கிறேன். காதல் செய்ய வைத்து, பயம் காட்டி, உணர வைத்து, பிரமிக்க வைத்து, மிரட்டி, கொஞ்சி, கொடுத்து, வலம் செய்து, வழிகாட்டி, வாய் பிளக்க வைத்து, காடுகள் முழுக்க இந்த அண்டத்தின் பேரண்டம் நான் தான் என்று, ராஜன் நான், கஜராஜன் என்று தும்பிக்கையை உயர்த்தி நிற்கிறது யானை.

யானை என்ற பிம்பத்தை மிகை படுத்துகிறேனோ? ஆம், அந்தக் கரிய மலையை, கஜராஜனை, காட்டின் கடவுளை, ஆனைமுகத்தோனை, முழுமுதற்கடவுளை, பேரண்டத்தை, காட்டின் மைந்தனை, கள்ளம் கபடமற்ற, இவனை இக்கட்டுரை மூலம் மிகைப்படுத்தவில்லை.

இவன் மட்டுமே இந்த இயற்கைக்குப் பொருந்தக்கூடிய முதல் உயிர் என்பதை உரக்க சொல்லவே என் கையை அவன் தும்பிக்கை இயக்கத்திற்கு முன் வந்து கொடுத்திருக்கிறேன். யானை எப்படிப் பேரண்டமானது? உலக மொழிகளிலே தொன்மையான மொழி தமிழ் என்றால், தமிழ்த்தாய் அறியாததையா நான் அறிந்துவிடப் போகிறோம்?

ஆம் உலக மொழிகளிலே ஒரு உயிரினத்திற்கு அதிகமான பெயர்கள் கொடுத்திருப்பது தமிழ், அந்த உயிரினம் "யானை", யானைக்குத் தமிழில், வேழம் (வெள்ளை யானை), களிறு, களபம், மாதங்கம், கைம்மா (துதிக்கையுடைய விலங்கு), உம்பர், உம்பல் (உயர்ந்தது), அஞ்சனாவதி, அரசுவா, அல்லியன், அறுபடை, ஆம்பல், அறுபதிற்கும் மேற்பட்ட பெயர்கள் உள்ளன. உலகம் முழுக்க இந்தப் பேரண்டம் முழங்க "யானை.. யானை.." என்று உரக்கக் கத்தி அகம் மகிழ்திருகிறாள் தமிழ் தாய்.

யானை காதலன்.

(காதல் தொடரும்.....)



# வரலாற்றில் வாயலூர் – ஓர் பார்வை

– ஆயிஷா பேகம்




வாயலூர் என அழைக்கப்பெறும் இவ்வூர் கல்பாக்கத்தில் இருந்து 2 கி.மீ தொலைவில் அமைந்துள்ளது. வயல்கள் நிறைந்த ஊராக விளங்கியதால் "வயலூர்" என அழைத்தனர். நாளடைவில் அது மருவி வாயலூர் என்று ஆனது. வியாக்ரபரதர் என்னும் முனிவர் சிவபெருமானை நோக்கி தவம் புரிந்த இடமாக வாயலூர் விளங்குகிறது.

சங்க கால வாழ்விடம்

வாயலூர்க்கு அருகே வசுவசமுத்திரம் என்னும் ஊரில் சென்னை பல்கலைக்கழகத் தொல்லியல் துறை நடத்திய அகழ்வாராய்ச்சியில் சங்க காலத்தைச் சேர்ந்த பொருட்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.வாயலூரிலும் சங்க கால பானை ஓடுகள் கிடைக்கின்றன.கடற்கரைக்கு மிக அருகில் அமைந்துள்ளதால் பண்டைய வணிக நகரமாகவும் திகழ்ந்திருக்கக்கூடும்.

ஆராய்ச்சியாளர்கள் இங்கு விரிவான ஆய்வினை மேற்கொண்டால் சங்க கால மக்களின் வாழ்விடங்களையும், பழங்கால பொருட்களையும் கண்டுபிடிக்க முடியும்.வாயலூரின் காலத்தை முன் எடுத்தும் செல்ல முடியும்.

வரலாற்றுக் காலம்

பாலாற்று நதிக்கரையில் அமைந்துள்ள வாயலூர் பல்வேறு அரசர்களின் ஆட்சியின் கீழ் இருந்துள்ளது. குறிப்பாகப் பல்லவர்களின் நிர்வாகத்தில் மிகச்சிறந்த வளர்ச்சியைப் பெற்றிருந்தது. அப்பகுதியைப் பல்லவர்கள் மட்டுமில்லாமல் சோழர்கள், பாண்டியர்கள், விஜயநகரர்கள் போன்றோரின் ஆட்சியிலும் சிறந்து விளங்கியது.

திருப்புலிஸ்வரர் திருக்கோயில்

வரலாற்றுச் சிறப்புமிக்க வாயலூரில் பல்லவர்கள் காலத்து சிவன் கோயில் ஒன்று உள்ளது. அக்கோயிலில் உள்ள இறைவனுக்கு "வியாக்ரபுரீஸ்வரர்" என்ற பெயரும் "திருப்புலிஸ்வரர்" என்ற பெயரும் உண்டு. இறைவன் சுயம்புவாய் தோன்றிய பெருமை இத்தலத்திற்கு உண்டு. இக்கோயில் பல்லவர்கள் காலத்தில் கட்டப்பட்டது என்றாலும், பிற்கால மன்னர்களின் கலைப்பாணி அதிகம் உள்ளது. சோழர், பாண்டியர், விஜயநகர மன்னர்கள் கோயிலுக்கு திருப்பணிகளையும்,கொடைகளையும் அளித்துள்ளார்கள்.

கோயில் கட்டடக்கலை

திருப்புலிஸ்வரர் கோயில் சிறந்த கட்டடக்கலை அமைப்பைக் கொண்டுள்ளது. இக்கோயில் "கஜ பிஷ்டம்" என்னும் அமர்ந்திருக்கும் யானையின் பின்புற தோற்றத்தைக் கொண்டுள்ளது. கோயில் சுவரில் அழகான தேவக்கோட்டங்களும், தூண்களும் அமைந்துள்ளன. பல்லவர் காலத்து கோயில்



என்றாலும் கோயிலில் உள்ள கோட்டங்களில் சோழர் கால சிற்பங்கள் காணப்படுகின்றன.

கோயிலின் நுழைவு கோபுரம் முற்கால பல்லவனான இராசசிம்மனின் காலத்தை சேர்ந்தது.

இக்கோயில் அர்த்த மண்டபம், பெருமாள் சன்னதி, அம்மன் சன்னதி, சிறு மண்டபம் ஆகியவற்றைக் கொண்டுள்ளது. கோயிலின் அடித்தளம் உபானம் பெற்று எழுகிறது. அதற்கு ஜகதியும் (கல்வெட்டுகளுடன்), திரிப்பட்டை குமுதமும், குமுத்தின் மேல் கம்புவும், கண்டமும் உள்ளன. கண்டத்தில் மேல் பத்மவேதிகைகள் அமைகின்றன.

கபோதத்திற்கு மேற்புரம் மகர வரிசைகள் இருக்கின்றன மற்றும் சுவர் தேவக்கோட்டங்கள் அழகான கோட்ட பஞ்சரங்களைக் கொண்டுள்ளன.

மண்டபம்

கோயில் வளாகத்தில் விஜயநகரர் கால மண்டபம் ஒன்று காணப்படுகிறது. மண்டபத் தூண்களில் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

1) வானரங்கள்
2) பிள்ளையார்
3) ஆடல் மகள்
4) வில்லேந்திய இராமர்
5) ஆழ்வார்கள்
6) பூத கணம்
7) கண்ணன்
8) யாளி
9) இரட்டை மான்கள்

தூண்களில் மலர் மொட்டுப் போதிகைகளும் மண்டபத்தின் அடிப்பகுதியில் கோலாட்டம் ஆடும் பெண்களின் சிற்பங்களும் காணப்படுகின்றன.

தேவக்கோட்டச்சிற்பங்கள்

1) பிரம்மா
2) விநாயகர்
3) தட்சிணாமூர்த்தி
4) விஷ்ணு
5) துர்கை

பெருமாள் சன்னதியின் வடப்புற சுவரில் சிறு விநாயகர் சிற்பம் ஒன்று காணப்படுகிறது.

கல்வெட்டுகள்

1) இரண்டாம் நரசிம்ம வர்மன்
2) முதலாம் இராசராசன்
3) முதலாம் குலோத்துங்கன்
4) மாறவர்மன் சுந்தரப்பாண்டியன்

இரண்டாம் நரசிம்மவர்மனின் கிரந்த கல்வெட்டு அவனுடைய பட்டப் பெயர்களையும், பல்லவ குலத்தையும், மன்னர்கள் பற்றியும் குறிப்பிடுகிறது.

மேலும், இக்கல்வெட்டு பிரம்மா, அங்கிராஸ்,

பிரகஸ்பதி, சாம்யு, பரத்வாஜா, துரோணா, அஸ்வத்தாமன் போன்ற முனிவர்கள் பற்றியும், வட இந்திய மன்னர்கள் பற்றியும் குறிப்பிடுகிறது.

முதலாம் இராசராசனின் கல்வெட்டு

இக்கல்வெட்டு, இராசராசனின் 12வது ஆட்சியாண்டில் அதாவது கி.பி. 997-ல் வெட்டப்பட்டதாகும். கல்வெட்டில் இறைவனுக்கு விளக்கு எரிப்பதற்கு கொடைகள் கொடுத்த செய்தி கூறப்பட்டுள்ளது.

மாறவர்மன் சுந்தரப்பாண்டியன் கல்வெட்டு

சோழர்களை வேரறுத்த மாறவர்மன் சுந்தர பாண்டியனின் கல்வெட்டு ஒன்று கோயிலில் உள்ளது. அக்கல்வெட்டு கோயிலுக்கு அளித்த நிவந்தங்கள் பற்றி கூறுகிறது.

தேவக்கோட்ட சிற்பங்கள்

தட்சிணாமூர்த்தி

கி.பி. 11-ம் நூற்றாண்டைச் சேர்ந்த சிற்பமான இது சோழர்கால கலைப்பாணியை கொண்டுள்ளது. சிகை அலங்காரமாக ஜடா மண்டலமும், கழுத்தில் சரப்பளியும், முத்துமாலையும், காதில் பத்ர குண்டலங்களும், தோள்களில் வளைகளும் அணி செய்கின்றன.

நான்கு கரங்களை கொண்டுள்ள இவரது மேற்கரங்கள் பாம்பு மற்றும் கமண்டலத்தை கொண்டுள்ளன. கீழ்க்கரங்கள் இரண்டும் அபயத்திலும், வரதத்திலும் உள்ளன.

வீராசனத்தில் உள்ள ஐயனின் பாதம் முயலகனின் மேல் உள்ளது மற்றும் அவரது திருவடியை சுற்றி தாருகாவனத்து முனிவர்கள் இருக்கின்றனர்.

நான்முகன் பிரம்மா பிற்கால சோழர் காலத்தைச் சார்ந்தவர். சமபாத ஸ்தானகத்தில் நின்றுள்ள அவரது கரங்களில் அக்கமாலையும், கமண்டலமும் அணி செய்கின்றன. மற்ற கரங்கள் அபயத்திலும், வரதத்திலும் உள்ளன.

பெருமாள்

பெருமாள் நான்கு கரங்களை கொண்டுள்ளார். மேற்கரங்களில் சக்கரத்தையும், சங்கையும் வைத்துள்ளார். அபயத்திலும்,வரதத்திலும் மற்ற கரங்கள் உள்ளன. காதில் மகர குண்டலங்கள் அணிந்துள்ளார். வாயலூர் ஓர் வரலாற்றுச் சுவடுகள் நிறைந்த ஒப்பற்ற ஊராக இன்றும் விளங்கி வருகிறது. எதிர் காலத்தில் பல ஆய்வுகள் இந்த ஊரில் மேற்கொள்ளப்பட்டால் இதன் எண்ணற்ற வரலாற்று புதிர்கள் வெளிப்படும்.

## பண்டைய எழுத்துக்கள் #1



**ஒலியாக இருந்த மொழி, சைகைகளாக மாறியது. சைகைகள் ஓவியங்களாகத் தீட்டப்பட்டன. ஓவியங்களின் தொகுப்புகள் கதைகளைக் கூறப் பயன்பட்டன. பின்பு ஓவியத்தில் உள்ள ஒவ்வொரு பகுதிக்கும் பெயர் வைக்கும் பழக்கம் உருவாகியது. அவையே தனித்த ஒலியுடையச் சித்திர எழுத்துக்கள் தோன்றியதற்கு முக்கிய காரணமாக அமைந்தது. பின்னர் பல சித்திர எழுத்துக்கள் சேர்ந்து அதன் ஒலிப்புக்கு ஏற்ப சொற்கள் பிறந்தன. கடைசியில் ஒவ்வொரு ஒலிக்கும் ஒவ்வொரு சித்திரங்களை எழுத்தாக நிர்ணயித்து மொழிக்கு நிலையான எழுத்துக்கள் உருவாக்கப்பட்டன.**

**எழுத்துக்களின் பயன்பாடு, நாகரிக பண்பாட்டின் துவக்கப் புள்ளியாகக் கருதப் படுகிறது. இது சமயக் கருத்துக்களை எழுதப் பயன்பட்டது என்று பரவலாகக் கூறப்பட்டாலும் முக்கியமாக அரசு பயன்பாட்டிற்காகவும், நில அளவை, வரியிடுதல், மகசூல் கணக்கிடுதல், மக்கள் தொகை, கூலி ஆகிய முக்கிய ஆவணங்களை எழுத எழுத்துக்கள் பயன்பட்டன.**

**எழுத்து அதன் வடிவம், மொழி ஆகியவற்றின் அடிப்படையில் பலவாறு பிரிக்கப்பட்டாலும், 38 வகை பண்டைய எழுத்துக்கள் உள்ளன. ஆனால் அவை இன்றும் மொழி அறியப்படாத 32 வகை எழுத்துக்கள் உள்ளன. பொருளே கூற முடியாத சில எழுத்து முறைகளும் உள்ளன.**

# சோழகேரளபுரம்

## – சிவநேசன் ஏகாம்பரம்

திருவண்ணாமலை மாவட்டம், வந்தவாசி வட்டம், சளுக்கை கிராமத்தில் (கிராமத்தின் பழைய பெயர் சோழகேரளபுரம் என்கிற சளுக்கி) அமைந்துள்ள ஆலயத்தைப் பற்றி இங்குச் சுருக்கமாகக் காண்போம்.

**நகரச் சிறப்பு**

சோழகேரளபுரம் என்கிற சளுக்கி என்ற நகரம் சோழர்கள் காலத்தில் மிகச் சிறந்து விளங்கிய வணிக நகரங்களில் ஒன்று என்பது கல்வெட்டுச் செய்திகள் மூலம் அறியப்படுகிறது. இந்நகரம், ஜெயங்கொண்ட சோழமண்டலம், வெண்குன்றம் வளநாடு, வெண்குன்றம் கோட்டத்தில் பண்டைய சோழர்கள் காலத்தில் அமைந்திருந்தது. இந்நகரத்தில் மனுகுல கேசரீச்சரம் என்கிற மனுகுல மகாதேவ ஈசுவரர் ஆலயம், சோழகேரள விண்ணகரம் என்கிற சுகர் நாராயணப் பெருமாள் ஆலயம், உத்தரதேவி என்கிற கிராம தேவதை ஆலயம் ஆகிய ஆலயங்களும், வீரகேரளபெரும்பள்ளி என்கிற சமணர்கள் பள்ளியும் சோழர்கள் காலத்தில் மிகச் சிறந்து விளங்கின.

ஆனால் தற்சமயம், உத்தரதேவி என்கிற கிராம தேவதை ஆலயத்தைத் தவிர மற்ற ஆயலங்களும், பள்ளியும் வழக்கத்தில் இருக்கின்றன. உத்தரதேவி ஆலயம் வழக்கிழந்தது

இந்த ஆலயம் ஒரு மாடக்கோயில் வடிவில் அமைந்திருப்பது ஒரு சிறப்பாகும். மூலவராக விளங்கும் அருள்மிகு மகாதேவர் சுயம்பு மூர்த்தியாக விளங்குகிறார். இந்த ஆலயம் முழுவதும் கற்றளியாக (கருங்கற்களினால்) கட்டப்பட்டது. மூலவர் விமானம் முழுவதும் கற்றளியாக விளங்குவது தனிச்சிறப்பாகும். கிழக்கு, மற்றும் தெற்கு ஆகிய இரு திசைகளிலும், நுழைவாயில்கள் அமைந்துள்ளன. கிழக்கு நுழைவாயிலில் நுழைந்த உடன் கொடிமரத்திற்குப் பதிலாக விநாயகர் வீற்றிருக்கிறார். அதன் பின்பக்கத்தில் மகா நந்தி அமைந்திருக்கிறது. சுற்றுப் பரிவாரங்களாக விநாயகர், தட்சிணாமூர்த்தி, மகாவிஷ்ணுவும் பரிவார மூர்த்தியாக மூன்று சிவலிங்கங்கள், வள்ளி மற்றும் தேவசேனா சமேத சுப்பிரமணியர், சண்டிகேசுவரர், பிரம்மா, பைரவர் மற்றும் நவக்கிரகங்கள் ஆகியன நிர்மாணிக்கப்பட்டுள்ளன.

ஆலயத்தில் பதினாறு கால் மண்டபத்திலிருந்து வடக்கு நோக்கி நுழைந்தால் தெற்கு நோக்கி மரகதவல்லி தாயார் வீற்றிருக்கிறார். மேலும் உள்மண்டபத்தில் சமயக்குரவர்கள், நந்திதேவர், துவார பாலகர்கள் ஆகியோர் அமர்ந்துள்ளனர். மகா மண்டபத்தின் முன் இரு பக்கங்களிலும் விநாயகர் மற்றும் சுப்பிரமணியர் ஆகியோர் அமர்ந்திருக்கிறார்கள். கருவறையில் அருள்மிகு மனுகுல மகாதேவ ஈஸ்வரர்



அருள்வடிவமாக, யாவர்க்கும் அருளும் வண்ணம் அருளின் சுரங்கமாக வீற்றிருக்கிறார்.

**வரலாற்றுச் சிறப்புகள்**

*அ) சோழர்கள் கால கல்வெட்டுச் செய்திகள்*

*1) இரண்டாம் ராசேந்திர சோழன் :- ( காலம் கி.பி. 1055ஆம் ஆண்டு)*

இந்த ஆலயத்தில் கிடைத்துள்ள கல்வெட்டுக்களில் மிகவும் பழமை வாய்ந்த கல்வெட்டாகத் திகழ்வது, இரண்டாம் இராசேந்திர சோழனின் நான்காம் ஆண்டு கல்வெட்டாகும். இதில் இராசாதிராச சோழனின் கல்யாணபுரம், கொல்லாபுரம் போர் மற்றும் யானை மீது இறந்த செய்தி ஆகியன இடம்பெற்றிருக்கின்றன. இப்போர் நிகழ்ந்த ஆண்டு கி.பி. 1054ஆம் ஆண்டாகும்.

இக்கல்வெட்டின் ஆண்டு கி.பி.1055 ஆக இருப்பதால், இக்கோயில் கட்டப்பட்ட ஆண்டு கி.பி.1055 அல்லது அதற்கு முற்பட்டதாக இருக்கலாமெனக் கருதப்படுகிறது.

*2) வீரராசேந்திர சோழன் கல்வெட்டு (காலம் கி.பி.1069)*



இந்த ஆலயத்தில் வீரராசேந்திர சோழனின் 6ஆம் ஆண்டுக் கல்வெட்டு கிடைத்துள்ளது. இக்கல்வெட்டு வீரராசேந்திர சோழனின் "திருவளர்" என்று தொடங்கும் மெய்க்கீர்த்தியுடன் சோழகேரளபுரம் நகரத்தார், மனுகுல மகாதேவர் ஆலயத்தின் ரதம் வலம் வருவதற்காக, சாலைகள் அமைக்க நிலம் வாங்கிய செய்தி இடம்பெற்றுள்ளது.

*3) முதல் குலோத்துங்க சோழன் (காலம் கி.பி. 1119)*

இந்த ஆலயத்தில் முதல் குலோத்துங்க சோழனின் 49ஆம் ஆண்டுக் கல்வெட்டு கிடைத்துள்ளது. இக்கல்வெட்டு, முதல் குலோத்துங்க சோழனின் "புகழ்மாது விளங்க" என்று தொடங்கும் மெய்க்கீர்த்தியுடன் நகரத்தாரால் 2 வேலி நிலம் தேவதானமாக "சுந்தரி உதயான்ஜெல்" என்ற "பூவேந்திய சோழ மாணிக்கம்" என்கிற நாட்டிய நங்கைக்கு வழங்கிய செய்தி இடம்பெற்றுள்ளது.

*4) விக்கிரம சோழதேவன் கல்வெட்டு :- (காலம் கி.பி. 1122)*

இந்த ஆலயத்தில் விக்கிரம சோழதேவனின் 4 ஆம் ஆண்டுக் கல்வெட்டு கிடைத்துள்ளது. இதில் ஒரு தனி நபர் இவ்வாலயத்திற்கு அமாவாசைக்கு விளக்கு எரிக்கும் செலவிற்காகத் தங்கம் வழங்கியச் செய்தி இடம்பெற்றுள்ளது.

*5) இரண்டாம் குலோத்துங்கச் சோழன் கல்வெட்டு (காலம் கி.பி. 1136)*

இந்த ஆலயத்தில் இரண்டாம் குலோத்துங்கச் சோழனின் 3 ஆம் ஆண்டுக் கல்வெட்டு கிடைத்துள்ளது. இக்கல்வெட்டு இரண்டாம் குலோத்துங்கச் சோழனின் "பூமேவி வளர்" என்ற மெய்க்கீர்த்தியுடன் தொடங்குவதுடன், இவ்வாலயத்திற்கு நிலம் வழங்கிய செய்தியும் இடம்பெற்றுள்ளது.

*பாண்டியர்கள் கல்வெட்டு :- (காலம் கி.பி. 1309)*

இவ்வாலயத்தில் பாண்டிய மன்னன் இதரவர்மன் குலசேகர தேவ பாண்டியனின் 41ஆம் ஆட்சிக்காலத்திய கல்வெட்டு ஒன்றும் இடம்பெற்றுள்ளது. அதில் இவ்வாலயத்தில் செய்யப்படும் திருப்பணிக்காக வழங்கப்படும் தேவதான நிலங்களுக்கு வரிச்சலுகைகள் அளிக்கப்பட்ட செய்தியும் இடம்பெற்றுள்ளது.



விசயநகரப் பேரரசு காலத்தியக் கல்வெட்டு (காலம் கி.பி. 1518)

இவ்வாலயத்தில் வீரப்பிரதாப கிருஷ்ணதேவ மகாராயர் காலத்திய கல்வெட்டு ஒன்றும் உள்ளது. அந்தக் கல்வெட்டில் அன்பளிப்புகள் மற்றும் தேவதான நிலங்களுக்கு 20 பொன் வரிச்சலுகை வழங்கியச் செய்தியும் இடம்பெற்றுள்ளது. மேலும் இவ்வாலயத்தில் அடையாளம் தெரியாத கல்வெட்டுகள் இரண்டும் இடம்பெற்றுள்ளது. அதில் இவ்வாலயத்திற்கு வழங்கப்பட்ட தேவதானம், மற்றும் விளக்கு எரிக்க, திருப்பணி வசூல் தொகை ஆகியவற்றிற்கு வரிச்சலுகைகள் வழங்கப்பட்ட செய்தியும் இடம்பெற்றுள்ளது.

சோழகேரளவிண்ணகரம் என்ற சுகர் நாராயண பெருமாள் ஆலயத்தில் உள்ள மனுகுல கேசரீச்சரம்

ஆலயம் தொடர்பான செய்திகள் :-

இராசேந்திர சோழன் காலத்திய சோழகேரள விண்ணகரம் என்ற பெருமாள் ஆலய கல்வெட்டில், மனுகுல கேசரீச்சரம் என்கிற மனுகுல மகாதேவ ஈஸ்வரர் ஆலயம், சோழ கேரள விண்ணகரம் என்கிற சுகர் நாராயண பெருமாள் ஆலயம், உத்தரதேவி என்கிற கிராம தேவதை ஆலயம் ஆகிய ஆலயங்களுக்கும்,





வீரகேரளபெரும்பள்ளி என்கிற சமணர்கள் பள்ளிக்கும் சோழகேரளபுரம் நகரத்திற்கு அருகில் அமைந்துள்ள எறும்பூர், குரும்பூர், வீரபெரும்பாக்கம், இலுப்பை ஆகிய கிராமங்களில் நிலம் ஒதுக்கிய செய்தி இடம்பெற்றுள்ளது.

இச்செய்தியிலிருந்து மனுகுல மகாதேவ ஈஸ்வர ஆலயம் மற்றும் சுகர் நாராயண பெருமாள் ஆலயம் ஆகிய இரு ஆலயங்களும் சமகாலத்தியவையாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது. வீரகேரள பெரும்பள்ளி என்கிற சமணர்கள் பள்ளியும் தற்போது சமணர்களால் வணங்கப்பட்டு வருகிறது. ஆனால் உத்தரதேவி என்கிற கிராம தேவதை ஆலயம் தற்பொழுது அடையாளம் அறியப்படவில்லை.

தற்காலத்திய நிலக்கொடை பற்றிய செய்தி:-

கி.பி.1910ஆம் ஆண்டு, செப்டம்பர் மாதம் 5 ஆம் நாள் சளுக்கை கிராமத்தில் வசித்த திரு. எல்லப்ப முதலியார் அவர்களின் இல்லாள். திருமதி. பட்டம்மாள் என்பவர் மனுகுல மகாதேவ ஈசுவரர் ஆலயம் மற்றும் சுகர் நாராயண பெருமாள் ஆலயம் ஆகிய இரு ஆலயங்களுக்கும் நிவேத்தியம் மற்றும் விளக்கு எரிக்க ஆகும் செலவிற்காக சுமார் 16.5 ஏக்கர் நிலம் தானமாக வழங்கியுள்ளார். ஆனால் தற்சமயம் அனைத்து நிலங்களும் கிராம மக்களில் ஒரு சிலரால் அபகரிக்கப்பட்டுப் பெயர் மாற்றம் செய்யப்பட்டுள்ளது. தற்சமயம் மனுகுல மகாதேவர் ஆலயத்தின் பெயரில் 50 செண்ட் நிலம் மட்டுமே உள்ளது.

இவ்வளவு வரலாற்றுச் சிறப்புமிக்க அருள்மிகு மரகதவல்லி உடனுறை மனுகுல மகாதேவ ஈசுவரர் ஆலயம் கி.பி. 1518 ம் ஆண்டுவரை சீரும்சிறப்புமாக இருந்ததை மேலே கூறப்பட்டுள்ள கல்வெட்டுச் செய்திகள் மூலம் நன்கு விளங்குகிறது. பிற்காத்தில் படிப்படியாகச் சிறப்புகள் குறைந்து சரியான பராமரிப்பின்றி பாழடைந்து போனது.



அருள்மிகு மரகதவல்லித் தாயார் உடனுறை மனுகுல மகாதேவ ஈசுவரர் ஆலயத்தின் 1999 ஆம் ஆண்டுக்கு முந்தைய நிலை

பிற்காலத்தில் திரு.கோ. ஏகாம்பர முதலியார் என்பவரின் பெருமுயற்சியாலும் கிராமப் பொது மக்களின் ஒத்துழைப்பினாலும், எளிய முறையில் திருப்பணிகள் நடைபெற்று 2002 ஆம் ஆண்டு ஜூன் மாதம் 21 ஆம் நாள் (ஆனி மாதம் 7ஆம் நாள்) வெள்ளிக்கிழமை சீரும் சிறப்புமாகக் குடமுழுக்கு விழா நடந்தேறியது. மேலும், ஆகம விதிமுறைகள் படி திரு. எ.இராசாமணி முதலியார் மற்றும் திரு. வெ.பாலகிருஷ்ணன் முதலியார் ஆகியோரின் முயற்சியினாலும் கிராம பொது மக்களின் ஒத்துழைப்பினாலும் மீண்டும் திருப்பணிகள் நடைபெற்று குடமுழுக்கு முறையே செய வருடம், பங்குனி மாதம், 20ஆம் நாள் (03-04-2015) வெள்ளிக்கிழமை வளர்பிறை உத்திர நட்சத்திரம், கூடிய நன்னாள் காலை 9.00 மணிக்கு மேல் 10.30 மணிக்குள் ரிசப லக்னத்தில் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா நடைபெற்றது.

திருக்கோயில் இருப்பிடம்;-

தற்போதைய வந்தவாசியிலிருந்து காஞ்சிபுரம் செல்லும் சாலையில் நான்காவது கிலோ மீட்டர் தொலைவிலிருந்து கிழக்குத் திசையில் சுமார் இரண்டு கிலோ மீட்டர் தூரம் சென்றால் இத்திருக்கோயிலை அடையலாம்.



# "கும்கி" எனும் யானை



**"கும்கி" என்றால் வங்க மொழியில் "பெண் யானை" என்று பொருள்.**

**மதம் பிடித்த காட்டு யானையை, கும்கி வைத்து ஏமாற்றி (*Decoy*) பிடித்ததாக *1807* ஆம் ஆண்டு ஆங்கிலேயச் சாசனம் கூறுகின்றது. கும்கியை வைத்து யானையைப் பிடித்து, பின்பு பழக்கப்படுத்தப்பட்ட ஆண் யானையை வைத்து முரட்டு யானையைப் பிடிப்பது ஒரு வீரவிளையாட்டாகவே கருதி வந்துள்ளனர்.**

**வேட்டைக்குச் செல்லும்போது கும்கியை அழைத்துச் செல்வது அவர்களின்**



**வழக்கமாக இருந்தது. குமக் என்றால் பெர்சிய மொழியில் "துணை" அல்லது *Aid* என்று பொருள்.**
**முகலாயப் பேரரசில் போருக்குச் செல்லும் போது ராணுவத்திற்கு உதவியாக உள்ள துணைப் படையையும் "கும்கி" என அழைத்தனர்.**



# மக்கள் முதல் மன்னன் வரை பள்ளிப்படை அமைத்து வழிபட்ட தமிழர்கள்

### – ஆயிஷா பேகம், முனைவர் பட்டமாணவர்

பஞ்சவன் மாதேவி பள்ளிப்படை

புகைப்படங்கள்: வேலுதரன்

"*Sepulchrl Temple*" எனப்படும் பள்ளிப்படைகோயில்கள் என்பது இறந்தவர்களின் நினைவாக அவர்களின் சமாதியிலோ அல்லது அவர்கள் இறந்த இடத்திலோ கட்டப்படும் நினைவுச் சின்னமாகும். அதற்கு அடிப்படையாக அமைவது மூத்தோர் வழிபாடு எனப்படும் பெருங்கற்கால சின்னங்களே.

ஏனெனில் பெருங்கற்கால சின்னங்கள், இறந்தவர்களின் நினைவாக அமைக்கப்படுவதாகும். பள்ளிப்படைகோயில் இறந்த பேரரசர்களுக்காகவோ அல்லது சிற்றரசர்களுக்காகவோ அமைக்கப்படுவதாகும். அரிதாகவே அதிகாரிகளுக்கோ (அ) பொது மக்களுக்கோ அமைக்கப்பட்டிருக்கும்.

பெருங்கற்கால சின்னங்கள்

நாம் முன்பே கூறியது போல், பள்ளிப்படை கோயில்களுக்கு அடிப்படையாக அமைவது பெருங்கற்கால சின்னங்களே. அவற்றின் காலம் கி.மு 1000 முதல் கி.மு 1000 வரை. தமிழகத்தில் பல்வேறு வகையான ஈமச்சின்னங்கள் காணப்படுகின்றன.

1) கல்வட்டம்
2) கற்திட்டு
3) ஈமப்பேழை
4) முதுமக்கள் தாழி
5) குத்துக்கல்
6) மனித உடல் போன்று இருக்கும் ஈமச்சின்னம்
7) கற்பதுக்கை

இவற்றில் கற்திட்டு போன்று இருக்கும் ஈமச்சின்னம் சிறு கட்டடம் போல் இருக்கும்.

நடுகற்கள்

பெருங்கற்கால சின்னங்களை அடுத்து மூத்தோர் வழிப்பாட்டின் அடையாளமாக அமைவது வீரக்கற்கள் எனப்படும் நடுகற்கள். இவற்றைக் கிராமங்களில் காவல் தெய்வங்களாக வழிப்படுகிறார்கள். நடுகற்கள் அமைப்பதற்கான காரணங்கள் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்தப்படுகிறது.



பஞ்சவன் மாதேவி பள்ளிப்படை கோபுரம்

1) போரில் இறந்தவர்களுக்காக
2) ஆநிரையை கவர்ந்து வரும்போதும் (அ) மீட்டு வரும்போது
3) காட்டு விலங்குகளுடன் நடந்த சண்டையில்
4) போரில் அடைந்த வெற்றிக்காக (நவகண்டம்)
5) பெண்கள் உடன்கட்டை ஏறும்போதும் (சதிக்கற்கள்)
6) கர்ப்பிணிப் பெண் இறந்த பிறகு (சுமைதாங்கி கற்கள்)

அத்தகைய நடுகற்களுக்கு அடிப்படையாக அமைவது குத்துக்கற்கள் எனப்படும் பெருங்கற்கால சின்னமே ஆகும்.

வீரனின் உருவம் பொறித்த நடுக்கற்கள், சங்க காலத்தில் இருந்து தோன்றியது எனலாம். பழந்தமிழ் இலக்கியமான தொல்காப்பியம், நடுகற்கள் வரலாற்றைப் பற்றி கூறுகிறது. நடுகற்கள் எனப்படுபவை முன்னோர் வழிப்பாட்டின் இரண்டாம் நிலையாகும்.

பள்ளிப்படைக்கோவில்கள் சோழர் காலத்தில் தோன்றியது என்றாலும் பல்லவர் காலத்திலும் அவை இருந்திருக்க வாய்ப்புண்டு. ஆனால் பல்லவர்கள் காலத்தில் நடுக்கற்கள் வளர்ச்சி இருந்தது. திருவண்ணாமலையில் கண்டுபிடிக்கப்பட்ட நடுக்கற்கள் பல்லவ மன்னன் மகேந்திரவர்மன் காலத்தை சார்ந்தது.

1) பெருங்கற்கால சின்னங்கள் - மூத்தோர் வழிப்பாட்டின் முதல் நிலை
2) நடுக்கற்கள் - மூத்தோர் வழிப்பாட்டின் இரண்டாம் நிலை
3) பள்ளிப்படை கோயில்கள் - மூத்தோர் வழிப்பாட்டின் மூன்றாம் நிலை

பள்ளிப்படை கோவில்கள்

பள்ளிப்படை கோயில் என்றும் சமாதிக்கோயில் என்றும் அழைக்கப்படும் இவ்வகையான கோயில்கள் சோழர்கள் காலத்தில் அமைக்கப்பட்டன. சோழர்கள் இறைவனுக்கு மட்டுமல்லாமல் இறந்த முன்னோர்களுக்காகவும் கோயில்கள் அமைத்துள்ளனர். இறந்த அரசர்க்கு உருவச்சிலைகள் அமைத்தலும் பூசை முதலியன செய்தலும் சோழர் கால வழக்கில் இருந்தன.

பள்ளிப்படை என்பதற்கு இறந்தவர்களின் "ஈமக்கடன்" என்று பொருள். இலிங்க மூர்த்தமாக வழிபடப்பெற்ற சிவன், வழிப்பட்ட உருத்திரனாகக் கருதப்பட்டான்.

உருத்திரன் அழித்தற் கடவுள், சுடுகாட்டுத் தெய்வம் மண்டையோடுகளை மாலையாகக் கோத்துத் தலையில் அணிந்தவன், மயானத்தில் நடனமாடுபவன், பிணச்சாம்பலை பூசிக்கொண்டிருப்பவன் போன்ற கருத்துகள் சிவனை பற்றிக் கூறப்பட்டுள்ளன.

மயானத்தின் தலைவனாக சிவபெருமான் கருதப்பட்டதால் பள்ளிப்படை கோயிலின் இறைவனாக வழிப்படப்பட்டார். இறந்த அரசர்களின் பெயருடன் ஈஸ்வரம் என்ற வார்த்தையை சேர்த்து கோயிலின் பெயர் வழங்கப்பட்டது. பள்ளிப்படை கோயில்களை கண்டுபிடிப்பதற்கு அங்குள்ள கல்வெட்டுகள் உதவிபுரிகின்றன.

பள்ளிப்படை கோயில்களின் நிர்வாகம்

பள்ளிப்படை கோயில்களின் நிர்வாகம் "பாசுபதர்-லகுலீசர்" என்னும் சைவத் துறவிகளின் கட்டுப்பாட்டின் கீழ் இருந்துவந்துள்ளது. இம்முறை முதலாம் இராசராசன் காலத்தில் இருந்துதான் நடைமுறைப்படுத்தப்பட்டது. இந்த பாசுபதர்கள் சைவ சமயத்தின் ஒரு பிரிவாக கருதப்படுகிறார்கள்.

பள்ளிப்படை கோயில்கள் சில சைவ மடங்களின் நிர்வாகத்தில் கூட இருந்திருக்கிறது. பாசுபதர் துறவிகள் பள்ளிப்படை கோயில்களை நன்கு நிர்வகித்துக் கொண்டும், மூன்று வேளைப் பூசை செய்துக் கொண்டும் வாழ்ந்திருக்கிறார்கள். அவர்களுக்கு அரசர்கள் எண்ணற்ற தானங்களையும் கொடைகளையும் வழங்கி இருக்கிறார்கள்.

சோழர் கால பள்ளிப்படை கோயில்கள்

ஆதித்தேஸ்வரம்

முதலாம் பராந்தக சோழன் தன் தந்தை ஆதித்த சோழனுக்கு காளத்தியில் கோயில் ஒன்றைக்


பண்டசோழ நல்லூர்

கட்டினான். காளத்தி என்னும் ஊர் ஆதித்தய சோழன் இறந்த ஊராகும். இக்கோயில் கோதண்டராம ஈஸ்வரம் எனவும் வழங்கப்படுகிறது.
அரிஞ்சிகை ஈஸ்வரம்

முதலாம் இராசராசன் தன் பாட்டனார் அரிஞ்சயருக்கு, வேலூர் மாவட்டம், மேல்பாடியில் பள்ளிப்படை கோயில் ஒன்றை கட்டினார். அரிஞ்சய ஈஸ்வரம் என அழைக்கப்பட்ட கோயிலுக்கு எண்ணற்ற கொடைகளை அளித்துள்ளார். இந்த அரிஞ்சய சோழர் வேலூர்க்கு அருகில் ஆத்தூரில் இறந்து போனவர்.

உடையார் இராசராசனின் சமாதி

கும்பகோணத்திற்கு அருகே உள்ள உடையாரில், முதலாம் இராசராசனின் சமாதி இருக்கிறதாக ஒரு கருத்து அவ்வூர் மக்களிடையே நிலவுகிறது. ஒரு கோயிலை கண்டவுடன் பள்ளிப்படை கோயில் என்று எளிதாகக் கூறிவிட முடியாது. அதற்குக் கல்வெட்டு ஆதாரங்கள் வேண்டும். உடையார் வாழை தோப்பு என்னும் இடத்தில், ஒரு பெரிய சிவலிங்கம், ஆவுடையார் இன்றி வெறும் பாணத்துடன் இருக்கிறது. இதன் அடிப்பகுதியில் சில செங்கற்கள் இருக்கின்றன. இந்த லிங்கத்தை முதலாம் இராசராசனின் பள்ளிப்படை என்று சில ஆராய்ச்சியாளர்களும் ஊர் மக்களும் நம்புகிறார்கள்.

சில ஆய்வாளர்கள் அதே ஊரில் உள்ள கைலாசநாதர் என்னும் சிவன்கோயில் தான்


பண்டசோழ நல்லூர்

# நெல்லும் "Paddy" யும்



நெல் என்பதை ஆங்கிலத்தில் *"Paddy"* என்று கூறுவார்.

சோழர் காலத்தில், அரசு வேலையிலிருந்து, கூலி வேலை வரை நெல் "சம்பளமாக" அளிக்கப்பட்டது. நீண்ட நாள் கெடாது என்பதால் *3000* ஆண்டுகளுக்கு முன் சுமேரியாவிலும் தினை அரிசி கூலியாகவும், பணத்திற்குப் பதிலாகவும் கொடுக்கப்பட்டது.

இன்று செய்யக்கூடிய வேலைக்கு மேல் போட்டுத் தரக்கூடியத் தொகைக்கு "படிக்காசு" என்று பெயர். இது சில தலைமுறைக்கு முன்பு வரை, கிராமப்புறங்களில் வயல் வேலைகளில் ஈடுபடும் கூலித் தொழிலாளர்களுக்கு அறுவடையின் போது "படிநெல்" அளிக்கபட்டுவந்துள்ளது.

இதேப் போன்று ஆங்கிலேயர் கம்பெனி ஆட்சிக் காலத்திலும், போர் வீரர்களுக்கு *Daily Allowance* எனப்படும் படிக்காசு, தினமும் "படி-நெல்"லாக கொடுக்கப்பட்டது. ஆனால் அவர்களின் புத்தகத்தில் படி நெல்லை *"Batta"* எனக் குறித்தனர். இது கன்னடத்தில் இருந்து உருவாகிய *Bhakta* என்ற சமஸ்கிருத சொல். இதனை *Baddy* என்றும் பல இடங்களில் குறிப்பிட்டுள்ளனர். பின்பு போர்த்துக்கீசியர்கள் இங்கிருந்து நெல் விவசாயத்தை ஜாவா தீவுகளில் அறிமுகம் செய்துள்ளனர். அங்கு நெல்லைப் பாடி *Paadi* என்றே அழைத்தனர்.



மேல்பாடி கோவில் கல்வெட்டு

இராசராசனின் பள்ளிப்படை எனக் கூறுகிறார்கள். பால்குளத்து அம்மன் கோயில் தூணில் உள்ள முதலாம் குலோத்துங்கனின் கல்வெட்டு "ஸ்ரீ இராசராச தேவர்" எழுந்தருளும் திருமாளிகை என்று தெரிவிக்கிறது. இரு வேறுபட்ட கருத்துகள் இராசராசனின் பள்ளிப்படை பற்றி நிலவுகின்றன.

திருப்புறம்பியம் பள்ளிப்படை

திருப்புறம்பியம் பள்ளிப்படை கங்க அரசன் முதலாம் பிருதிவீபதிக்கு சோழ மன்னன் முதலாம் ஆதித்தனால் எடுக்கப்பட்டதாகும்.

இம்மன்னன் பாண்டியர்களுடன் நடந்த போரில் தன் உயிரை இழந்தவன். வரலாறு பேசும் திருப்புறம்பிய போர் கி.பி.880-ல் நடந்ததாகும். திருப்புறம்பியம் என்னும் கும்பகோணத்திற்கு அருகே அமைந்துள்ளது.

பஞ்சவன் மாதேவி பள்ளிப்படைக் கோயில்

கும்பகோணத்திற்கு அருகே உள்ள பட்டீஸ்வரம் என்னும் ஊரில் முதலாம் இராசேந்திரனின் தாய் பஞ்சவன் மாதேவியின் பள்ளிப்படை அமைந்துள்ளது. முதலாம் இராசேந்திரன் அக்கோயிலைக் கட்டி எண்ணற்ற தானங்களை வழங்கியுள்ளான். "பழையாறை முடிகொண்ட பஞ்சவன் மாதேவி பள்ளிப்படை" என்று கல்வெட்டில் குறிப்பிடப்படும் இக்கோயில் லகுலீச பண்டிதர் என்னும் சைவத்துறவியின் நிர்வாகத்தின் கீழ் இருந்துள்ளது.

கி.பி.11-ம் நூற்றாண்டு முதல் சாளுக்கிய சோழர் (பிற்கால சோழர்) வரை வழிப்பாட்டில் இருந்த கோயில், தற்போது இராமசாமி கோயிலாக மக்களின் வழிப்பாட்டில் இருந்து வருகிறது. சோழர்கள் காலத்தில் இப்பள்ளிப்படை கோயில் "பஞ்சவன் மாதேவி ஈஸ்வரம்" என்றும், பஞ்சவன் மாதேவிச்சுரம் என்றும் அழைக்கப்பட்டது.

மாறவர்மன் சுந்தரபாண்டியனின் பள்ளிப்படை.

சோழர் குலத்தை வேர் அறுத்த மாறவர்மன் சுந்தரபாண்டியனின் பள்ளிப்படை, மதுரைக்கு அருகில் கண்டுபிடிக்கப்பட்டது. சிறு கோயிலாக காணப்படும் இதனை உள்ளூர் மக்கள் வழிபட்டு வருகிறார்கள். அக்கோயிலை மாறவர்மன் சுந்தரபாண்டியனுக்கு பின் வந்த அரசர்களோ அல்லது அவனது அதிகாரிகளோ கட்டியிருக்கலாம்.

பள்ளிப்படை கோயில் அரசர்கள் மற்றும் அரசிகளுக்கு மட்டுமல்லாமல் பொது மக்களுக்காகவும் எடுக்கப்பட்டது. இவ்வகையான பள்ளிப்படை பாண்டிச்சேரிக்கு அருகில் பண்டசோழ நல்லூர் என்கிற திருமுடவன் பள்ளி என்னும் ஊரில் அமைந்துள்ளது. இது திருமுடவன் என்னும் சிவப்பிராமணுக்காக அமைக்கப்பட்டதாகும்.



# கொங்கு நாட்டின் வன துர்கையும் விஷ்ணு துர்கையும்

(வேலுதரண் )





"ஆனைத் தோல் போர்த்துப் புலியின் உரி உடுத்துக்
கானத்து எருமைக் கருந்தலைமேல் நின்றாயால்-
வானோர் வணங்க மறைமேல் மறையாகி,
ஞானக் கொழுந்தாய், நடுக்கு இன்றியே நிற்பாய் !
(வேட்டிவ வரி சிலப்பதிகாரம் )

சிலப்பதிகாரத்தில் இது கொற்றவையைப் பற்றிய குறிப்பு. அதற்கு முற்பட்ட இலக்கியங்களில் கொற்றவையைப் பற்றிய குறிப்புகள் மறைமுகமாகவே காட்டப்பட்டிருக்கின்றது. கலித்தொகையில் "கொற்றி" எனவும், அகநானூற்றில் "ஓங்கு புகழ் கானமர் செல்வி" எனவும், பதிற்றுப்பத்தில் "உறுகெழு மரபின் அயிரை" எனவும், குறுந்தொகையில் "விறல் கெழு சூழி" எனக் குறிப்பிடப்படுபவை அனைத்தும் கொற்றவையே என்று அறிஞர்கள் கருதுகின்றனர்,

முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என நானிலம் அதன் நிலை திரிந்த வறண்டப் பகுதியே பாலை எனக் கருதப்படுகின்றது. கொற்றவை, குறிஞ்சி நிலத்தின் கடவுளாக முதலில் அறியப்பட்டாலும், குறிஞ்சி திரிந்து பாலையாகி, அப்பாலை நிலத்தின் கடவுளாகவே கொற்றவை வணங்கப்பட்டாள்.

அவளே பாலை நிலத்தில் வாழும் மறவர் இனத்திற்குக் குலதெய்வமாகவும், வெற்றியைக் கொடுக்கும் தெய்வமாகவும் விளங்கியதாகச் சங்க நூல்கள் கூறுகின்றன. முதலில் உருவமில்லா வழிபாடு கொற்றவையாக, 8 கரங்களில் பல ஆயுதங்களை ஏந்தி (வில் வாள், சூலம், விவசாயத்திற்குப் பயன்படும் கலப்பை போன்ற ஆயுதங்கள்) வழிபடப்பட்டாள் வேத காலத்திற்குப் பிறகு சமஸ்கிருதத்தின் தாக்கத்தால் கொற்றவை பல வடிவங்களைப் பெறுகின்றாள்.

முதலில் சிங்கக் கொடியும், பசுங்கிளியும் ஏந்தி கலைமானின்மீது ஏறி, பேய்கள் புடைசூழ வலம் வருபவள் எனப்பட்டாள். காண்பவர்க்குப்

பயத்தை அளிக்கும் தோற்றத்துடனும் முகத்துடனும் உருவகப்படுத்தப்பட்டாள். அவளுக்குத் தன்னையே பலி கொடுத்தும், தன் உடம்பின் தசையை அர்ப்பணித்தும் மறவர் வணங்கினர். வேத காலத்தில் கொற்றவை, திருமாலின் தங்கையாகவும், முருகனுக்கு அன்னையாகவும், எருமைத்தலை கொண்ட மகிசனை வதம் செய்யும் போது மகிஷமர்த்தினியாக மாற்றங்கள் பெறுகின்றாள்.

கோயிலில் தனி தெய்வமாக வணங்கப்பட்ட கொற்றவை, கோட்ட தெய்வமாக மாற்றம் அடைகின்றாள். எட்டு கரங்களுடன் காட்டப்பட்ட கொற்றவை, நான்கு கரங்களுடன் ஆயுதங்கள் இன்றி, திருமாலுக்குரிய சங்கும் சக்கரமும் மட்டுமே கொடுக்கப்படுகின்றாள். தற்போது காணக்கிடைக்கும் கொற்றவை உருவங்கள் கொற்றவை, மகிசமர்த்தினி மற்றும் துர்கையின் கலப்புக்களாகவே கிடைக்கின்றன. இவ்வகையில் கொங்கு நாட்டின் இரண்டு துர்கைகளைக் காண்போமா.

வனதுர்கை

இந்த வனதுர்கை கொங்கு நாட்டில் ஒரு கிராமத்தில் தனி கோயிலில் வழிப்பாட்டில் இருக்கின்றாள். ஊரின் ஒதுக்குப்புறமாக ஒரு சிறிய கோயில். அதிக பாதுகாப்பு எதுவும் இல்லை. இவள், சோழர்கள் காலத்தைச் சார்ந்தவள் எனக் கருதப்படுகின்றாள். மேல் இருக்கரங்களில் சங்கும் சக்கரமும் (விஷ்ணுவைப் போல் அன்றி இரண்டும் இடம் மாறி இருக்கின்றன), கீழ் இருக்கைகளில் ஒன்று அபய முத்திரையுடனும் மற்றொன்று இடுப்பிலும் வைத்துக் காணப்படுகின்றாள்.

அணிகலன்களாகக் கழுத்தில் ஆபரணமும், பூணூலும், காதில் ஆபரணமும் காட்டப்பட்டு உள்ளது. ஆடையாக மார்புகச்சும் இடையில் அரை ஆடையும், துர்கையின் வாகனம் சிங்கம் வலது காலின் அருகே நிற்கின்றது. எருமைத்தலை (அசுரன் மகிஷன்) மீது சுமார் எட்டு அடி உயரத்தில் நின்ற நிலையில் காணப்படுகின்றாள்.

விஷ்ணு துர்கை.

இந்தத் துர்கையும் கொங்கு நாட்டில் ஒரு கிராமத்து திறந்தவெளி கோவிலில் இருக்கின்றாள். காலத்தால் பிற்பட்டவள். பலகைக் கல்லில் புடைச் சிற்பமாக மகிஷன் தலை மீது நின்ற திருக்கோலம். உயரம் சுமார் 7 அடி. மேல் இருக்கைகள் சங்கு சக்கரத்துடனும், கீழ் இருக்கைகளில் ஒன்று நிலத்தை நோக்கியும் மற்றொன்று தொடையின் மீது இருத்தியும் காணப்படுகின்றாள். காதில் குண்டலமும், கழுத்தில் ஆபரணமும் அணிந்து இருக்கின்றாள். இடையில் அரை ஆடையும் மார்புக்கச்சும் அணிந்து இருக்கின்றாள்.

## தரங்கம்பாடி பொன் ஓலை



***1620*** **ஆம் ஆண்டு ஏப்ரல் பதினாறாம் நாள், இரகுநாத நாயக்கர், டென்மார்க் மன்னர் நான்காம் கிருஸ்தியனுக்கு பொன்னோலை ஒன்றை நட்புறவு கடிதமாக அனுப்பி வைத்தார். இக்கடிதம் கவர்னர் ஓவஜெட்டே மூலமாக மன்னரைச் சென்றடைந்தது.**

**இது பனையோலை போன்று தங்கத் தகட்டில் தமிழில் எழுதி, "ஸ்ரீரகுநாத" என்ற மன்னரின் கையெழுத்து தெலுங்கிலும் காணப்படுகின்றது. இக்கடிதம் வாழ்த்து செய்திகளுடன் ஆரம்பிக்கிறது. மேலும், டென்மார்க் அரசோடு நட்பு பாராட்ட எண்ணம் கொண்டுள்ளதையும், ஹாலந்து தளபதிக்கு பல்லக்கு தந்துள்ளதையும், டென்மார்க் மக்கள் வந்து குடியேற தரங்கம்பாடியை ஏற்பாடு செய்துள்ளதையும் குறிப்பிடுகின்றது. இதற்காக வரியாக ஆண்டொன்றுக்கு** ***2500*** **பகோடா தங்கக்காசு அளிக்கப்பட்டது.**

**மேலும் மிளகு ஏற்றுமதி செய்யவும், அதை யாரும் தடுக்காத வகையில் மற்ற ஏற்பாடுகள் செய்துள்ளதையும் குறிப்பிடுகின்றார். போர்த்துக்கீசியர்களுக்கு ஏற்கனவே நடந்த இடையூறுகளுக்காகத் தண்டம் வாங்கியதையும், மேலும் பல பரிசுப் பொருட்களாக பீதாம்பரம், புருசுதுப்பட்டி, படாங்க பச்சவடம், எழுத்துப்பட்டி, சமதாடு, தோப்பாக்கத்தி, சிங்க உருவக் கடாரி, சூகக் கடாரி, சினகரம் ஆகியவை அந்தக் கடிதத்துடன் அனுப்புவதாகவும் கூறுகிறது. இது பின்பு** ***1845*ல்** ***12 1/2*** **லட்சம் ரூபாய்க்கு ஆங்கிலேயரிடம் விற்கப்பட்டது.**

**மேலும் இக்கடிதத்தில் டென்மார்க் மக்கள் இங்கு வந்து குடியேறவும், அபூர்வமான பொருட்கள் அங்குக் கிடைப்பின் அவற்றை இங்கு அனுப்பவும், இங்கு இருக்கும் பொருட்களை அங்கு அனுப்பவும் ஒப்புதல் அளித்துள்ளார். இப்பொன்னோலை தற்போது கோபன்ஹேகன் நகரிலுள்ள மன்னரின் ஆவணக் காப்பகத்தில் பாதுகாப்பாக உள்ளது.**



# பிரம்மதேசத்தில் ஒரு நாள்..

## – அ. வேலுப்பிள்ளை



பிரம்மதேசம் என்னும் இவ்வூரில் தான் மாமன்னர் இராஜேந்திர சோழரும், அவரின் மனைவியான வீரமாதேவியும் தங்கள் இறுதிக் காலத்தைக் கழித்தனர் என்பது மட்டுமே வரலாற்றுச் செய்தி மற்றவை உரையாடல் என் கற்பனையே.

இடம் : பிரம்மதேசத்து ஏரிக் கரையோரமாக உள்ள புளியந்தோப்பு.

இராஜேந்திரர் : வீரமாதேவி! அடியே! அந்த நாள் ஞாபகமிருக்கிறதா?

வீரமாதேவி : எந்த நாளினைச் சொல்கிறீர்கள்? மன்னரே.

இராஜேந்திரர் : ஹா... எந்த நாளா?... மனமெல்லாம் கரை புரண்டோடும் காட்டாறாய்... நான் அலைபாய்ந்து கொண்டிருந்த நேரம். என்னை நானே, தேடித் தேடிச் சலித்த நேரம். அரண்மனை உண்டு, சேடிகள் உண்டு... பொன்னிட்டால்.. பொத்தியணைக்கிற பொண்டுகள் உண்டு.. எனினும் நான் எனக்குள் மருகிக் கிடந்த நேரம்... உன்னை உன்னைத்தான், அதோ... அந்த வேங்கி நாட்டிற்குச் செல்லும் வழியில் பாலாற்றங்கரைதனில் சந்தித்தேன்.

வீரமாதேவி : ஆ.. அந்தச் சந்திப்பு?

இராஜேந்திரர் : வீரமாதேவி! அந்தச் சந்திப்பினை ஞாபகப்படுத்திப்பார்? நள்ளிரவு நேரம், ஆற்றங் கரையருகே பிள்ளையார் கோவிலருகே என் குதிரையிலிருந்து இறங்கி.. எங்கேனும் மனிதர்கள் தட்டுப்படமாட்டார்களா? என நான் தவித்துக் கொண்டிருந்தபொழுது... ? உதடுகள் இரண்டும் உணவருந்தி இரு நாட்களாகிவிட்ட களைப்பினில் ஒன்றுடன் ஒன்று ஒட்டிக் கொண்டிருந்த கோலம். நேராகப் பாருங்கள்..! நேராகப் பாருங்கள்! என்கிற குரல் மட்டும் கேட்டுக் கொண்டிருந்தது. நீண்டிருந்த பாதையில் ஆளரவமே இல்லை. குரல் கேட்ட திசை நோக்கித் திரும்பினால், வெண்முத்துக்கள் கொட்டினாற் போன்று.. வெளிச்சமாக இருந்தது ! உன் புன்னகையின் வெளிச்சம் அது ! அந்த வெளிச்சம் தான்... அன்று என் பசியாற்றிற்று ! அன்று! அன்றிலிருந்து தானே... நான் நானாக மாறினேன் ! தேவி !

வீரமாதேவி : இன்னும் எத்தனைக் காலம் தான் இதனையே சொல்லிக் கொண்டிருக்கப்போகிறீர்கள்?

இராஜேந்திரர் : இன்னும் இருக்கிற காலமெல்லாம்... இதனை... இதனைத்தான் சொல்லிக் கொண்டிருப்பேன். தேவி !

வீரமாதேவி : நான் கட்டழகில்லை...

இராஜேந்திரர் : என்னைக் கட்டி விடும் அழகு இருக்கிறது.

வீரமாதேவி : நான் மற்றவர் போலக் கண்ணுக்கினியவள்



இல்லை.

இராஜேந்திரர் : என் கண்ணுக்கு இனியவளாக இருக்கிறாய். கண்மணி.

வீரமாதேவி: மற்றவர்போலக் கவர்ச்சியில்லை.

இராஜேந்திரர் : எது கவர்ச்சி ? தேவி ! விதவிதமாகப் பட்டாடைகள் மட்டுமே கட்டி பவனி வருவதுவா கவர்ச்சி? வண்ணச் சாந்துகள் குழைத்து... விழியெங்கும் அஞ்சனம் தீட்டி... காண்போரைக் கவர்கின்ற விதமாக நடமாடிக் கொண்டிருப்பதுவா கவர்ச்சி ?... இல்லை.. இல்லைவேயில்லை தேவி !

வீரமாதேவி : நான் நிறத்தால் கறுப்பி ?

இராஜேந்திரர் : ஹா.. கருங்கற்பாறைகளே இல்லாத இந்தச் சோழ தேசமே கறுப்பாகத்தானம்மா இருக்கிறது... நானும் தானே கண்ணே கறுப்பு.... ம்ம்ம்... இன்னும் என்னென்ன காரணங்களைக் கூறப்போகிறாயோ ?.. சொல் தேவி !

வீரமாதேவி : அரண்மனைக்கு வந்தால் உங்களைச் சுற்றிலும் அமைச்சர்கள், படைவீரர்கள்... அதிகாரிச்சிகள் என்ற பெயரில் பெண்கள்...

இராஜேந்திரர் : ... ஹாஹா.... நினைத்தேன்... தேவி! நினைத்தேன் ! வீரமாதேவி ! அதோ அந்த அதிகாரிச்சிகளில் நீ... மன்னிக்கவும் தேவி..... இராஜேந்திர சோழரின் திருமதி... வீரமாதேவியாரான... நீங்கள் பணியமர்த்திய பெண்களும் உண்டு! தேவி !

வீரமாதேவி : ஆனால்...

இராஜேந்திரர் : ஆனால்... என்ன ? ஆனால்... ஒன்று புரிகிறது ! தேவி ! எந்தை ஸ்ரீ ராஜராஜசோழர்... தான் கட்டிய இராஜராஜேச்வரத்தில் கல்வெட்டினில்... யான் கொடுத்தனவும்... எம்பெண்டுகள் கொடுத்தனவும்... என்று ஏன் கல்வெட்டினாரென்பது, இப்போது புரிகிறது?

வீரமாதேவி: அப்படியெனில்... நான் கருதுவது... தவறு என்கிறீர்களா? நான் பட்ட மகிஷி கூட இல்லை...

இராஜேந்திரர் : ஹா... நிச்சயமாகத் தவறுதான்... தேவி ! பெண்கள் எல்லோருமே இப்படித்தான் என்று உலகமே கருதிக் கொண்டிருக்கையில்... நான் உன்னிடம் தானே இராசாங்க காரியங்களைப் பற்றி ஆலோசித்தேன். என்ன மௌனமாக இருக்கிறாய் ?

வீரமாதேவி : ம்ம்...

இராஜேந்திரர் : இளவரசி அம்மங்காதேவியின் திருமணம் தள்ளிக் கொண்டே போகிறதே ? என்று நான் வருந்துகையில்... பட்டமகிஷி பேசாமலிருக்க... வரிந்து கட்டிக் கொண்டு ஆலயங்களிலெல்லாம்... அன்னாபிசேகம் செய்தவள் நீயல்லவா?... உழவாரப் பணி செய்தாய்...! எத்தனை... எத்தனை ஆலயங்கள்... சோழதேசத்தில் இருக்கிறது என்பதனை எனக்குக் காட்டியவளே நீதானேயம்மா ! நிவந்தங்கள் வழங்க வேண்டி நிர்ப்பந்தித்தாய்...! தென்னாடுடைய சிவனுக்கு ஆலயம் எழுப்ப வேண்டுமென அடிக்கல் நாட்டினாய் ? சோழ தேசத்தின் பண்டாரமே காலியாகி விடுமோ? எனச் சோழ தேசத்தின் தனாதிகாரி அருள்மொழிப்பட்டன் குறுக்கே வரும்போது கூட... உன் பண்டாரத்திலிருந்து செலவிட்டவள் நீயல்லவா?....

வீரமாதேவி: ம்ம்ம்... சொல்லிக்காட்டுகிறீர்களா?

இராஜேந்திரர் : இல்லை தேவி ! எதனையும் சொல்லிக் காட்டுவதல்ல என் நோக்கம். என்னைப் புரிந்து கொள்ளேன் என்கிறேன். வேறொன்றுமில்லை.

வீரமாதேவி : நான் உங்களைப் புரிந்து கொள்ளவில்லை என்கிறீர்களா?

இராஜேந்திரர் : நான் அப்படிச் சொன்னேனா? தேவி! நீயே கேள்விகளைத் தொடுக்கிறாய்... பதில்கள்... நீ எதிர்பார்த்தபடியே வர வேண்டுமென நினைக்கிறாய்... தேவி ! உன் நினைவுகள்... நினைப்புகள் தவறானவையென... நான் கருதவேயில்லை. அப்படிக் கருதியிருந்தால்... வேங்கி நாட்டிலே இருக்கிற என் தங்கை குந்தவையின் செயல்களைப் பற்றியெல்லாம்... நான் உன்னிடம் ஆலோசித்திருக்க மாட்டேனே ?

வீரமாதேவி : அப்படியெனில்... நீங்கள் குற்றமெதுவும் செய்யவில்லை ? நான்... நான் மட்டும் தான் குற்றவாளி என்கிறீர்களா?

இராஜேந்திரர்: ஹா... போதும் தேவி போதும்... அதோ... கங்கை கொண்டதும்... கடாரம் கொண்டதும்... எல்லாம் போதும் ! போதும்! என்றுதான்... ஏகாந்தமாக உன்னுடன் வாழ வேண்டுமென்று எண்ணித்தான் இங்கே கச்சிநகர் விட்டு முப்பது காத தூரம் தாண்டி வந்து... இதோ இந்தப் பிரம்மதேயத்தில் அமர்ந்திருக்கிறோம்...! இப்போதும்... தேவி ! நீ பேருக்கேற்றாற் போல வீரமாதேவிதான்... அதிலெனக்கு சந்தேகமே இல்லை தேவி ! ஆனால்... அன்று ஹொட்டூரில் நீ நடத்திய உன் பழைய வாள் வீச்சு வேண்டாம் ? பகைவர்களை ஓடஓட விரட்டி ஈட்டியைக் கொண்டே வெற்றியைப் ஈட்டியவளே ! என் இனிய வீரமாதேவி ! பழந்தீவு பன்னீராயிரம் வென்று வரக் கடலோடிய...



நானே... எல்லாம் போதுமென்று... உன்னை நாடி வந்திருக்கும்போது... இப்போதும்... நீ போர்ப்பரணி பாடாதே ? என் கண்மணி !

வீரமாதேவி : நானா? போர்ப்பரணி பாடுகிறேனா?

இராஜேந்திரர் : போர்பரணி பாடும் நேரம் இதுவல்ல என்கிறேன் தேவி ! அன்று வேங்கிக்கும்,, கங்கபாடிக்கும் செல்லுகையில்... நான் சோர்ந்திருந்த பொழுதுகளிலெல்லாம்... நீதானே குதிரையோட்டினாய்...! நான் ஒரு குழந்தையைப் போல் அல்லவா? உன் பின்னால் அமர்ந்தபடி... உன்னை மட்டுமல்ல... நம் சோழ தேசத்தினையும்... பிற நாடுகளையும் வேடிக்கை பார்த்தபடி வந்தேனே.. அந்த நாட்களைப் போல வேண்டுமடி நீ எனக்கு ! என்கிறேன்...

வீரமாதேவி : வயதானாலும்... வக்கணைப் பேச்சுக்குக் குறைச்சலில்லை... மன்னருக்கு...

இராஜேந்திரர் : அதெப்படியடீ குறையும்... நீ என் அனுக்கியான பொழுதிலிருந்துதான்... நான்... நானாகவே இருக்கிறேன் ! என்பதனை நீ அறிவாய் தானே ? அதோ... அங்கே பார்... தேவாரம் பாடிய சுந்தரர் நடந்து களைத்தபோது... வன்தொண்டனுக்கு கட்டுச்சோறு கொடுத்து... கூடவே நீரூற்றும் தோண்டிக் கொடுத்த பனங்காட்டூர் ஈசன் இருக்கும் இடம் ஒரு பக்கத்தில்... இதோ இங்கே பார்... யாம் வெட்டிய சோழகங்கம் போல இல்லையென்றாலும்.... ஓரளவிற்கு எம்மக்களின் தாகம் தீர்க்கிற ஏரிக் கரை... சுற்றிலும் பழமரங்கள் ! நிழல் தரக் காத்திருக்கிற புளிய மரங்கள்... அதோ நிசும்பசூதனிக்கு இணையான அந்தக் கிராமதேவதை... போதும் வீரமாதேவி ! ... இம்மக்களோடு மக்களாய்... யாம் வாழ்ந்து விடுவோம்! இன்னும் கொஞ்ச காலம் தான்... கொஞ்சலோடுதான் இருப்போமே ! தேவி !

வீரமாதேவி : இன்னும் எத்தனைக் காலம் தான் இப்படியே இருப்பது இராஜேந்திரரே ?

இராஜேந்திரர் : இதோ.. நம் பிள்ளைகள் மூவரும் தலை நிமிர்ந்து விட்டனர். இன்னும் சிறிது காலம் தான்.. அதற்குள் அவர்களே ஆட்சி நடத்துவர்... பிறகென்ன ? நாமிருவர் தானடியே!... இன்னும் ஒரு நூற்றாண்டு வாழ்ந்துதான் பார்ப்போமே! கண்மணி !

வீரமாதேவி : பிறகு...

இராஜேந்திரர் : ஹாஹ்ஹா... பிறகென்ன பிறகு... நம்மைப் போல... எவராவது..... நாம் இருக்கும் இடந்தேடி வராமலா போய் விடுவார்கள். நாம்... இன்றிருக்கும் இடத்திலிருந்தபடி... நாம் என்னென்ன பேசியிருப்போமென்றெல்லாம்... நினைக்காமலா? போய் விடுவார்கள். காத்திருப்போம்... நம்மைப் போலவே எவராவது கண்டிப்பாக வருவார்கள்! அவர்களுக்குச் சாட்சி சொல்லுவதற்காகவது... அதுவரைக்கும் அந்த ஏரிக்கரையும்... இந்தப் புளிய மரங்களும்... அதனருகே அந்தக் கயிலை ஈசனும்... கல்லாகவேனும் இருப்பார்கள் ! தேவி !

வீரமாதேவி : அப்படியா? எம்மானே !

இராஜேந்திரர் : ஆம் ! நம்பு தேவி ! நம்பிக்கை தானே வாழ்க்கை... வீரமாதேவி ! (முற்றும்)

## மின்னிதழ் உருவாக்கத்தில் உதவியோர்

**எழுத்தாக்கம்**
திருமதி. சிவகாமி

**வழிவமைப்பு ஆலோசனை**
A.T மோகன்
கார்த்திக் புகழேந்தி

**வழிவமைப்பு**
பா. ராஜசேகர்

**துணுக்குகள் தொகுப்பு**
ஹரிணி திருவேங்கடம்
(11 ஆம் வகுப்பு)

**புகைப்படங்கள்**
திரு. வேலுதரன்
Ar. வித்யாலட்சுமி

**மக்கள் தொடர்பு**
A.T மோகன்

**அலுவலக இட உதவி**
திரு. பச்சையப்பன்

# சிறுவயது கதைகளும் தேடலும்

## – அந்துவன் கேப்ரியேல்



அரிட்டாபட்டியிலிருந்து அழகர்கோயில் வரைக்கும், குலதெய்வங்களைப் பற்றியும், அக்குலதெய்வங்களின் வாகனங்கள் பற்றியும், அக்குலதெய்வங்களை வணங்கும் சமூகம் பற்றியும் பேசுகின்றன.

குலதெய்வத்திற்காக வேண்டுதலின் பேரில் விழாக்களின் போது நேர்சைக்காக நிறுத்தப்படும் நூறு, ஆயிரம் குதிரைகள் (பொம்மைகள்) சமூகத்தின் வரலாற்று எச்சங்களை வாய்மொழிக் கதைகளாக பேசுகின்றன. உதாரணமாக...

குதிரையின் மீது அமர்ந்தவாறு இருக்கும் குலதெய்வங்கள் பெரும்பாலும் வணிகச் சமூகங்களினால் வணங்கப்படுபவையாகச் சொல்லப்படுகிறது. ஐய்யனார் என்னும் சிறுதெய்வத்தை எடுத்துக் கொண்டால், இத்தெய்வம் நீர்நிலைகளைக் காக்கும் காவல் தெய்வமாகவும் வயல்வெளிகளைக் காக்கின்ற வளமைத் தெய்வமாகவும் இருவேறு சமூகத்தாராலும், வேட்டைத் தெய்வமாக மற்றொரு சமூகத்தினராலும் கொண்டாடப்படுகின்றார்.

காவல் தெய்வமாக இருக்கும் ஐய்யனார் குதிரையில் ஊரை வலம் வருபவராக இருப்பதையும் வேடுவர்களின் வேட்டைத் தெய்வமாக இருக்கும் ஐய்யனார் கொடூர நாய்களுடன் இருப்பதைக் காணலாம். மேலும் வரலாற்றில் ஐய்யனார் என்பதன் மூலச்சொல் சாத்தன் என்பதன் அடிப்படையிலும், சாத்தன் என்பது புத்தரைப் குறிக்கும் என்பதன் அடிப்படையிலும் ஐய்யனார் பௌத்தர்களாலும் வழிபடப்பட்டிருக்கிறார். சமணர்களினாலும் வழிபடப்பட்டிருக்கிறார்.

பௌத்த ஐய்யனார் குதிரையிலும், சமண ஐய்யனார் யானையிலும் வலம் வருபவர்களாக இருக்கின்றனர்.

ஐய்யனார் பௌத்த சமய தெய்வமாகக் கருதப்படுகிறது. சாத்தன் மற்றும் சாஸ்தா என்பது புத்தரைப் குறிக்கும். பிற்காலத்தில் தமிழகத்தில் பௌத்தம் செல்வாக்கு இழந்து இந்து மதத்தோடு (சைவம், வைணம்) இணைந்தபோது "சாத்தன்"...

1. கிராமப்புறங்களில் காவல் தெய்வமாகவும்,
2. பெருந்தெய்வக் கோவில்களில் பரிவார தெய்வமாகவும் மாறிப்போனார்.
3. தமிழகத்தின் பெரும்பாலான இடங்களில் ஐய்யனார் குதிரையுடன் இருப்பதைக் காணலாம்.

மூன்றாவதாகச் சாஸ்தா, சிவன் எனும் பெருமதக் கடவுளின் மூன்றாவது மகனாக அரிகர புத்திரனாக (விநாயகன், முருகனுக்கு அடுத்ததாக) மாறிப்போனார். புலி அவருக்கு வாகனமாகிப்போனது.

அரிட்டாபட்டியை ஒட்டி அமைந்துள்ளது. கழுஞ்சமலை. இந்த மலையில் தான் சமண படுகைக்கான





புடைப்பு சிற்பம் உள்ளது. சமணப்படுகையையும், புடைப்புச் சிற்பங்களையும் தேடிச் சென்ற எனக்குக் காவல் கருப்புவை கண்டது ஒரு போனஸ் தான். கிரானைட் கொள்ளைகளிடமிருந்து. இந்தக் காவல் கருப்புதான் இம்மலையைக் காத்துவருவதாக அவ்வூர் விவசாயி அயோத்தி சொன்ன கதைகள் நிறைய... ஐ.ஏ.எஸ் சகாயம் ஒரு காவல் தெய்வமாகத்தான் பார்க்கப்படுகிறார்.

காவல் கருப்புவை செல்போன் காமிராவில் பதிவு செய்த போது

குறிப்பு: கிராமங்களில் நான் காண்கின்ற சிறுதெய்வங்கள், மக்களோடு மக்களாகத் திறந்தவெளியில் எளிமையாக வாழ்கின்றன.

பெரிய பெரிய சடங்குகளும் பஜனைகளும் சம்பிரதாயங்களும்.. தத்துவங்களும், மிரட்டும் மெய்யியல், இறையியல் சித்தாதங்கள் ஏதும் இல்லாத, புராணங்களுக்கு அப்பாற்பட்டு வாழ்க்கையின் இயல்பான ஓட்டத்தோடு ஒன்றி வாழும் தெய்வங்கள் இவை.

மதனிமார் கதையும் .. கன்னிமார் தெய்வங்களும்

நம்மிடையே தாய்வழிச் சமூக மரபின் நீட்சியாகவோ அல்லது எச்சமாகவோ எஞ்சி நிற்பது "பெண் தெய்வங்கள்". ஏறக்குறையத் தமிழகத்தின் எல்லாக் கிராமங்களிலும் பெண் தெய்வங்கள் காணக்கிடக்கின்றன என்பது மட்டுமல்லாமல் சிறு தெய்வ வழிபாட்டு வழியிலான நாட்டார் தெய்வங்களில் பெண் தெய்வங்களே அதிகமாக இருப்பதையும் கவனிக்க முடியும். (எ.கா: அம்மன் வழிபாடு) இந்தப் பெண் தெய்வங்கள் உயிரை உருவாக்குபவள் என்கிற அடிப்படையில் (படைப்புச் சக்தியின் குறியீடாக) தாய்த் தெய்வங்களாகவும், அழியாத கன்னித் தன்மையுடையவள் (வளமையின் குறியீடாக) கன்னித் தெய்வங்களாகவும் வழிபடப்படுகின்றனர்.

உதாரணத்திற்கு, ஒவ்வொரு குடும்பத்திற்கு (பரம்பரையிற்குமான) கன்னிதெய்வங்களை கிராமப்புறங்களில் பெரியவர்கள் பேசுவதையும் வீடுகளில் கன்னிமூலை (தென்மேற்கு பகுதியை) பற்றிப் குறிப்பிடுவதையும் காணமுடியும். (வாஸ்து மூலையாகக் கன்னி மூலை மாறியது பிற்கால இடைச்செருகல்) "கன்னி" என்று சொல்லும்போது திருமணமாகாத கன்னித்தன்மை இழக்காத பெண் என்று பொருள்படுகிறது.

இந்தக் கன்னி தெய்வங்கள் சிறுதெய்வ வழிபாடு வகையிலான நாட்டார் தெய்வங்களாகும். தனிப்பட்ட முறையில் எனக்கு, தாய் வழிச் சமூகம் முன்னெடுத்த இந்தப் பெண் தெய்வ வழிபாடுகளைப் பற்றி தேடித் திரிந்து தெரிந்து கொள்வதிலும், அதை அடுத்த தலைமுறைக்கு அறிமுகப்படுத்துவதிலும் ஆர்வம் கொஞ்சம் கூடுதலாகவே உண்டு. அதற்காகவே, எந்தக் கிராமத்திற்கு சென்றாலும் அங்கு என்ன வகையான சிறுதெய்வ வழிபாடு மற்றும் அம்மன் வழிபாடு இருக்கிறது என்று கேட்டுத் தெரிந்து கொள்வது என்பது எனக்கு இயல்பாகிற்று. பொதுவாகப் பெண் தெய்வங்கள் என்றிருந்த இந்தத் தேடல் கோணங்கியின் மதனிமார் கதையை படித்தபிறகு, ஏதோ வகையில், மனதின் ஓரத்தில் இந்தக் கன்னிமார் தெய்வங்களுடனான நெருக்கத்தை ஏற்படுத்தியது. எங்கு இந்தக் கன்னிமார் தெய்வங்கள் இருந்தாலும் அவர்களைத் தேடி சென்று பார்ப்பது அதிகமானது. என்னுடைய அனுபவத்தில் இந்தக் கன்னிமார் தெய்வங்களைப்பற்றி பெருமதங்களான சைவமும் வைணமும் ஏழு தேவியர் பெயரைச் சொல்லி ஒரு புராணக் கதையையும் சொல்லுகின்றன.

அந்தகாசுரனை வதம் செய்வதற்காக.. அவனின் உதிரம் கீழே சிந்திவிடாதபடி குடித்துவிடுவதற்காக சிவனால் ஏழு கன்னியர் உருவாக்கப்பட்டதாகப் புராணக்கதை போகிறது. (ஏன் கன்னியர் என்றால்... தாய் தெய்வத்திற்கு, தாய்மை என்கிற குணம் அந்தகாசுரனை வதம் செய்வதை தடுத்துவிடும் என்பதாலே என்கிற விளக்கமும் கூறப்படுகிறது). ஆனால் நாட்டார் வழக்காற்றின் படியும் எனது கள ஆய்வுகள் மற்றும் தொடர் வாசிப்புகளின் படியும் சொல்லுவதென்றால்.

இந்த ஏழு கன்னியரும் வனதேவதைகளாக, காவல் தெய்வங்களாக (கன்னிமூலை என்பதும்.. கன்னி

தெய்வம் என்பதும் காவல் தெய்வமாகப் பார்க்கப்படும் மரபு இன்றும் உள்ளது) இருந்திருக்கவேண்டும். காலப்போக்கில் பெருமதங்கள் அவற்றை உள்வாங்கிக் கொண்டு இடைச்செருகலான புராண இதிகாச மறுவாசிப்பு செய்திருக்கலாம்.

எது எப்படியோ... இந்த ஏழு கன்னிமார் தெய்வங்களைப் பார்க்கின்ற பொழுதெல்லாம் கோணங்கியின் கதையில் வருகின்ற மதனிமார்; கதாப்பாத்திரங்கள் நினைவுகளை நிறைத்து நிற்கின்றன.

இந்தக் கதை கரிசல் மண்ணில் எழுதப்பட்டதாலோ என்னவோ, கரிசல் மண்ணை ஒட்டிய பகுதியில் கன்னிமார் தெய்வங்களை கண்டபோது.. மனம் கொஞ்சம் கணத்துத்தான் போனது.

சதுக்கப் பூதமும் என் பால்ய வயதின் பயம் கலந்த ரசனைகளும்

நான் முதன் முதலாகக் கேட்ட பேய்க் கதை இன்றும் எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. நான் 5ம் வகுப்பு படித்துக் கொண்டிருந்தேன். பேய்க் கதைகளை சொல்லுவதில் திறமை வாய்ந்தவர்கள் என என் தோழர்களான அருண், ரவி, முகமதுவும் பாப்புலராக வலம் வந்துகொண்டிருந்தனர்.

கிறித்தவ குடும்பத்தில் பிறந்திருந்ததாலும்... பேய் பற்றி நிறையப் போதனைகளை கேட்டவனாய் இருந்ததாலும் இவர்கள் என்ன பெரிதாய் சொல்லிவிடப் போகிறார்கள் என்கிற அலட்சியத்துடன் ஒருநாள் அவர்கள் சொல்லும் கதையைக் கேட்க ஆரம்பித்தேன்..

அது ஒரு இரத்தக் காட்டேரியின் கதை... சடைசடையா முடி தொங்குமாம்... முகத்தைப் பார்க்க முடியாதாம் நகம் எல்லாம் வளர்ந்து தொங்குமாம்... நான் பயத்தில் கொஞ்சம் கொஞ்சமாக உறைந்து கொண்டிருந்தேன்...



நல்லவேளை பள்ளியின் இறுதிமணி ஒலித்தது. ஆனாலும் அவர்கள் விடவில்லை.. ஹைலைட்டாக ஒன்றைச் சொல்லி முடித்தனர். அது என்னவென்றால், இரத்த காட்டேரி வருவதை எப்படித் தெரிந்து கொள்ளலாம் என்றால்... அது வரும் போது ஆந்தை அலறுமாம்..

அன்று இரவு ஒரு ஆந்தை அலற.. எனக்கு இரண்டு நாள் காய்ச்சல், அன்றிலிருந்து, பூதங்களின் சிலைகளை எங்கே கண்டாலும், இந்தக் கதை ஏனோ நினைவிற்கு வந்து தொலைக்கும்...

காலங்கள் கடந்து ஓடிய பிறகு, இன்றோ அதை நினைத்துச் சிரித்துக்கொள்கிறேன். இன்றெல்லாம் இந்தப் பூதங்களை தேடி ரசித்துப் பார்க்கிறேன். அப்படியான இரண்டு பூதங்களை... பெரியபுலி ஐய்யனார் கோவிலில் அடர்ந்த மரங்கள் மற்றும் புதர்களுக்கிடையில் சிதிலமடைந்த நிலையில் கொள்ளை அழகுடன் அழகர்கோயில் செல்லும் வழியில் கண்டுபிடித்தேன்.

வாசிக்கவும் பயணப்படவும் தொடங்கிய பிறகு...

பூதங்களைப் பற்றி குறிப்புகளைச் சிலப்பதிகாரத்திலும் மணிமேகலையிலும் வாசித்ததாக ஞாபகம். அதிலும் குறிப்பாக பூம்புகார் நகரில் இருந்ததாகக் கூறப்படும் சதுக்கப் பூதம், ஒருவர் கெட்டது செய்ய நினைத்தாலே போதும் அவர்களை தேடிப் பிடித்து விழுங்கிவிடும் எனக் குறிப்பிடப்படுகிறது.

"சுழல வந்து தொழத்துயர் நீங்கும்
நிழல்கால் நெடுங்கல் நின்ற மன்றமும்,
தவம்மறைந்து ஒழுகும் தன்மை இலாளர்
அவம்மறைந்து ஒழுகும் அலவல் பெண்டிர்
அறைபோகு அமைச்சர் பிறர்மனை நயப்போர்
பொய்க்கரி யாளர் புறங்கூற் றாளர்என்
கைக்கொள் பாசத்துக் கைப்படு வோர்எனக்
காதம் நான்கும் கடுங்குரல் எடுப்பிப்
பூதம் புடைத்துஉணும் பூத சதுக்கமும்,
.................."

"சதுக்கப் பூதம்" ஒரு காவல் தெய்வமாக, மக்களையும் பூம்புகார் நகரையும் காக்கின்ற தெய்வமாக வணங்கப்பட்டது. சிலப்பதிகாரத்தில் புகார்க் காண்டத்தில் வரும் இந்த வரிகள் சதுக்க பூதம் பற்றி தெளிவாகக் கூறுகின்றன.



# சோழர்களின் இசை கருவிகள்

## – Ar. வித்யா லட்சுமி



சோழர்களின் கல்வெட்டுகளில் அவர்களின் பயன்பாட்டில் இருந்த இசைக்கருவிகள் பற்றிய பல தரவுகள் காணக்கிடைக்கின்றன. அவற்றுள் தோல் கருவிகள் பற்றிய பதிவு இது. இவை அனைத்தும் கோவில் மற்றும் அதன் நிகழ்வுகள் சார்ந்த கருவிகள். சில கருவிகளின் பெயர்களும், தன்மைகளும், அமைப்பும் இலக்கியங்களின் உதவிக்கொண்டும் அறியப்படுகிறது. இதில் பல கருவிகளின் அமைப்பைக் கோவிலின் விமானங்கள், தூண்களில் உள்ள புடைப்பு சிற்பங்களிலும் காண முடியும்.

மத்தளம் - திருவையாறு ஐயாறப்பர் கோவில் கல்வெட்டில் "மத்தளம் கொட்டுகின்ற பாவையொன்று உலகமாதேவியால் வடகைலாச இறைவனுக்குக் கொடையாக அளிக்கப்பட்டதாகக் கூறுகிறது. மேலும் பல சோழர் கால கோவில்களில் ஒன்றிற்கும் மேற்பட்ட மத்தளங்கள் இசைக்கப்பட்டதாகக் கல்வெட்டுகளில் இடம் பெற்றுள்ளன.

செண்டை - இரு முகங்களும் தோலால் போர்த்தப்பட்ட இரண்டடி நீளமும் ஓரடி விட்டமும் கொண்ட கூம்பு வடிவ கருவி. பல கோவில்களில் சோழர் காலத்தில் செண்டை இருந்ததற்கான கல்வெட்டு சான்றுகள் உள்ளன.

குடமுழவு - தஞ்சைப் பெரிய கோவிலில் உள்ள சோழர் கால ஓவியங்களில் சுந்தரரின் வரலாற்றை விவரிக்கும் ஓவியங்களில் இரண்டு இடங்களில் குடமுழவு உள்ளது. திருமணஞ்சேரி கோவிலில் குடமுழவு பற்றிய கல்வெட்டு ஒன்று சிதைந்த நிலையில் காணப்படுகிறது.

திமிலை - வீரமுழவுகளில் ஒன்றான திமிலை, ஒரு மரத்துண்டை குடைந்து செய்யப்படும் இசைக்கருவி. திருமீயச்சூர் திருக்கோவிலில் உத்தமசோழரின் ஆட்சிக் காலத்தில் சோலைச் சாத்தனான கஞ்சிருக்கை பரலூருடையான் என்பார் திமிலையைக் கொடையளித்தார்.

கரடிகை - கரடி கத்தினாற் போன்ற ஓசையை உண்டாக்கியதால் இது கரடிகை எனப்பட்டது. சீனிவாச நல்லூர், குத்தாலம் கோவில், சோழமாதேவி, திருவிசலூர், மேல்சேவூர், திருவான்மியூர், காஞ்சிபுரம் கோவில்களில் கரடிகை வாசிக்கப்பட்டதாகக் கல்வெட்டுகள் கூறுகின்றது. அருணகிரிநாதர் பிள்ளைத்தமிழ் என்னும் நூலில் தாள இசைக் கருவிகள் எவை என்பதை, இடக்கைச் சல்லிகை கம்பராமாயணத்தில் வரும் ஒரு பாடலும் (8445) கரடிகை என்ற இசைக்கருவி இருந்ததை நமக்குத் தெளிவுபடுத்துகிறது. இதிலிருந்து தான் "சிவ பூஜையில்

கரடி" என்ற பழமொழி தோன்றியது.

படகம் - திருவாவடுதுறை கோமுக்தீசுவரர் கோவிலில் படகம் வாசிக்கப்பட்டது. இதை வாசித்த உவச்சருக்குத் திருவாவடுதுறை கற்றளிப்பிச்சர் கால் செய் நிலத்தை உவந்தளித்ததாகக் கல்வெட்டில் செய்தியில் உள்ளது.

உடுக்கை - சோழர் கால ஆடற்சிற்பங்களில் உடுக்கை இடம்பெற்றுள்ளது. திருவையாறு கோவிலில், இராஜராஜன் கால கல்வெட்டு ஒன்றில், ஆடலுக்கு இன்றியமையாத தாளக் கருவிகளாக மத்தளமும், உடுக்கையும் அமைந்ததைத் தெளிவாக உணர்த்துகின்றது.

இடக்கை - ஆவஞ்சியென்றும், குடுக்கையென்றும் அறியப்படும் இடக்கை அகமுழவாகும். இடக்கையால் நடுவில் உள்ள வார்க்கட்டுகளை அழுத்திக் கொடுத்துப் பல்வகைச் சுருதி அளவுகளுக்கு முழக்குவார்கள்.

சகடை - பெரிய கோவிலில் உள்ள கல்வெட்டில் "நித்தவினோத வளநாட்டு நல்லூர் நாட்டு நல்லூராகிய பஞ்சவன்மாதேவி சதுர்வேதிமங்கலத்தைச் சேர்ந்த அய்யன்பொய்யிலி, தாமோதிரன் செட்டி, பாழி அரங்கம், சாத்தன் அம்பலம், சத்தி ரணகேரளன் ஆகியோர் தலைமையில் ஐம்பது பேர் இக்கோவிலில் சகடைகொட்டிகளாகப் பணியாற்றினர் என்று கூறுகிறது.

கொட்டிமத்தளம் - இவ்வகை இசைக்கருவிகளை குச்சியைக் கொண்டு அடித்து ஒலி எழுப்புவர். பெரிய கோவிலில் "குணப்புகழ் மருதனான சிகாசிவன்" என்பவர் கொட்டி மத்தளத்தை வாசித்தார் என்ற செய்தி உள்ளது.

தட்டழி - சில சோழர்க் கால கோவில்களில் இவ்விசைக் கருவி இசைக்கப்பட்டதற்கான கல்வெட்டு சான்றுகளை அறியமுடிகிறது. திருச்செந்துறையில் உள்ள சந்திரசேகரர் திருக்கோவிலில் தட்டழி கொட்டிய உவச்சர்களுக்குத் தட்டழிப்புறமாக நிலமளிக்கப்பட்டதற்கான கல்வெட்டு உள்ளது.

தடாரி, தண்ணுரிமை, தகுணிச்சம், துந்துபி - தடாரி, தண்ணுரிமை சங்கக கால கருவிகள் மற்றவை சோழர் கால கருவிகள். சிற்பங்களில் தண்ணுரிமையை மட்டுமே அடையாளம் காணப்படுகிறது. கல்வெட்டுகளில் ஏதும் தரவுகள் கிடைக்கப்பெறவில்லை. சிற்பங்களிலும், இலக்கியங்களிலும் காணப்படுகின்றன.

மொந்தை - இந்த இசைக்கருவியைப் பற்றி கல்வெட்டு செய்திகள் கிடைக்கப்பெறவில்லை என்றாலும் இலக்கியங்களிலும், ஆடற் சிற்பங்களிலும் காணப்படுகின்றது. சோழர் கால விமானங்களில் பூதவரிகளில் காணப்படும், யானையின் காலைப் போன்று இருக்கும், இருகண் பறைகளை மொந்தை எனப்படுகிறது.

கல்லவடம், கல்லலகு, கல்லல், சல்லரி - இவை அனைத்தும் சோழர்க்கால வழக்கில் இருந்த கருவிகள். சல்லரி தோலால் மூடப்பட்ட ஒருமுகப்பறை. இந்த இசைக்கருவிகள் சோழர்க் கால சிற்பங்களிலோ, கல்வெட்டுகளிலோ காணப்படவில்லை.

பஞ்சமுக வாத்தியம் - ஐம்முக முழவம் வடிவத்தில் மிகவும் பெரிய தோலிசைக்கருவி ஆகும். குடமுழா, குடபஞ்சமுகி என்று இதற்கு பல பெயர்கள் உண்டு. தமிழ்நாட்டில் சில பெருங்கோவில்களில் மட்டும் இந்த இசைக்கருவி இசைக்கப்படுகிறது. திருவாரூர், திருத்துறைப்பூண்டி ஆகிய தலங்களில் இன்றும் பஞ்சமுக வாத்தியம் வாசிக்கப்படுகிறது.

துத்திரி, கைத்தரி - சோழர் கால இலக்கியங்களின் வழியே அறியப்படுகிறது. யானைக் கன்றின் அடிபோன்று பரந்த கண்களை உடையது இக்கருவி.

பூகரகம் பெருவடகம். "ஆட்டத்திற்குக் கொட்டும் பூகரகம் பெருவடகம் ஒன்றும்" என்று கல்வெட்டுக் குறிப்பதால் இது முழக்கும் கருவியாகும்.

தமருகம் - இக்கருவி புறமுழவு வகையாகும். பெரிய கோவில் கல்வெட்டொன்றில் சிவபெருமானின் கருவிகளாகத் தமருகம் கூறப்படுகிறது. சிற்பங்களிலும் இந்த வகை கருவிகள் பூதகணங்கள் இசைப்பதைப் போன்று உள்ளது.

சோழர்காலத்தில் இறை வழிபாட்டின்போதும், திருவிழாக்களின் போதும் இசைப்பணி ஆற்றுவதற்காக திருக்கோயில்களில் இசை குழுவினர் இருந்தனர். இவர்களை "சீறிகோயில் கொட்டும் உவச்சர்" என்றழைக்கப்பட்டனர். ஒவ்வொரு திருக்கோயிலுக்கும் அக்கோயிலின் தன்மைக்கேற்ப இக்குழுவில் பணியாளர்களின் எண்ணிக்கையும், இசைக்கருவிகளின் எண்ணிக்கையும் வேறுபட்டிருக்கும். குறிப்பாக, சிறீபலி, மூன்று சந்தி, திருப்பள்ளிஎழுச்சி, நடுச்சாமப்பூசை, திருவிழா, கூத்து போன்றவற்றிற்கு இவ்விசைக்குழுவினர் பணியமர்த்தப்பட்டிருந்தனர்.

முதலாம் இராசராசசோழன் கால கல்வெட்டொன்று, திருவான்மியூரிலுள்ள வேதபுரீசுவரர் கோயிலில் பணியாற்றிய பதினைந்து பேர்களடங்கிய இசைக்குழுவினரை "சீறிபலி கொட்டும் உவச்சர்" என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த உவச்சுப் பணியில் தலைப்பறை கொட்ட ஒருவரும், கரடிகை



கொட்ட இருவரும், மத்தளம் இசைக்க நால்வரும், மண்டை இசைக்க ஒருவரும், தாளம் இசைக்க ஒருவரும், காளம் இசைக்க நால்வரும், மற்றொரு இசைக்கருவியை இசைக்க ஒருவரும் இருந்தனர்.

திருக்கருகாவூர் வேளிவிடைநாதர் கோயிலில் ஒன்பது பேர் கொண்ட இசைக்குழுவும், இலால்குடி அருகிலுள்ள ஆலம்பாக்கம் திருமேற்றளியில் சீறிபலி கொட்டும் பணியில் பன்னிரண்டு பேர் பணியாற்றியுள்ளனர். இக்குழுவினர் மூன்று சந்தி, நடுச்சாமம், திருப்பள்ளி எழுச்சி ஆகிய பூசைகளில் இசைப்பணியாற்றியுள்ளனர்.
கோவிலடி திவ்ய ஞானேசுவரர் திருக்கோயிலில் எட்டுப்பேர் கொண்ட குழுவும் பணியாற்றியுள்ளது.

செஞ்சி பக்கத்திலுள்ள மேல்சேவூர் ரிடபபுரீசுவரர் திருக்கோயிலில் தலைப்பறை கொட்ட ஒருவரும், திமிலை வாசிக்க ஒருவரும், கரடிகை வாசிக்க ஒருவரும், கைம்மணி இசைக்க ஒருவரும், சங்கூத இருவரும் இருந்தனர். திருவிடைமருதூர் மகாலிங்க சுவாமி திருக்கோயிலில் திமிலை வாசிக்க ஒருவரும், கண்டை வாசிக்க நால்வரும், கைம்மணி இசைக்க ஒருவரும் இருந்துள்ளனர்.

இவர்கள் திருப்பள்ளியெழுச்சிக்கும், மூன்று வேளை பூசைக்கும் பொட்டுப்பணியாற்றுவதற்காக 1- வேலி நிலம் வழங்கப்பட்டிருந்தது. புதுக்கோட்டை மாவட்டம் குளத்தூர் வட்டம் திருவிளாங்குடியில் ஆறு பேர் கொண்ட இசைக்குழு பணியாற்றியுள்ளனர். இவர்களுள் ஐந்து பேர் உவச்சுப் பணியும், ஒருவர் சங்கூதும் பணியும் மேற்கொண்டனர்.

கோயில் தேவராயன்பேட்டை மச்சயபுரீசுவரர் திருக்கோயிலில் சிறீபலி கொட்டும் பணியில் ஐவர் அடங்கிய இசைக்குழு பணிபுரிந்திருக்கிறார்கள். திருக்கொள்ளிக்காடு அக்னீசுவரர் திருகோயிலில் பணியாற்றிய ஐவர் அடங்கிய இசைக்குழு மூன்று சந்திப் பூசையின் போது சீறிபலியின் போதும் திருப்பள்ளியெழுச்சியின் போது இசைப்பணி புரிந்துள்ளனர்.

# மடையர்கள்



**வளாகம் இடம், சூழந்திடல், தினைப்புனம், தோட்டம் போன்ற பொருள்களைக் குறிக்கிறது. கல்வெட்டுகளில் வளாகம் என்ற சொல் மிகக் குறைந்த அளவிலும் விளாகம் என்ற சொல் அதிக அளவிலும் காணப்படுகிறது.**

**திருக்குறுங்குடியிலுள்ள முதலாம் வரகுண மகாராஜரின் கல்வெட்டுதான் விளாகத்தைக் குறிக்கும் கல்வெட்டுகளில் காலத்தால் பழமையானது. இது பரப்பு என்னும் பொருளில் இலக்கியங்களில் ஆளப்படுகிறது. இது மடை எனும் முன்னொட்டை ஏற்றுக் கோயில் சார்ந்தவர்களின் குடியிருப்பைச் சுட்டும் சொல்லாகவும் பின்பு வளர்ந்துள்ளது.**

**"மடை" எனும் சொல் சமையல் தொழிலைக் குறிப்பதையும் மடை நூல் என்றே சங்க காலத்தில் சமையற் கலை நூலொன்று இருந்ததைப் பற்றிக் குறிப்புகள் உள்ளன.**

**கோனேரிராஜபுரத்துக் கல்வெட்டு "மடையர்கள்" என்று சமையற்காரர்களைக் குறிப்பதையும் நோக்க, மடைவிளாகம் என்பது முதலில் கோயிற்சார்ந்த அடுக்களைப் பணியாளர்க்கு அமைக்கப்பட்ட குடியிருப்புப் பகுதியாக இருந்தபின், கோயிற் பணியாளர் அனைவருக்குமான குடியிருப்புப் பகுதியாக வளர்ந்தது.**

**பின்பு பணியாளர்கள் எண்ணிக்கையில் பெருகிய ஒரு பெரிய ஊராகவே மாறியது எனலாம்.**

# மடவூர்பாறை சேரநாட்டு குடைவரை கோயில்

## – ச.சு.நாகராஜன் (சித்த மருத்துவ மாணவர்)



அன்றைய நாள் 18-01-2019 முந்தைய நாளின் திட்டமிடலின் படி சொந்த ஊரான இறச்சகுளத்தில் இருந்து நானும் நண்பன் சொக்கலிங்கமும் அதிகாலையில் 6 மணியளவில் ஊரில் இருந்து கிளம்பினோம். வழியில் புத்தேரி பெரிய குளத்தை பிளந்து போகும் அந்தச் சாலை பணிகள் மனதில் அந்த பெருங்குளம் குறித்த பால்ய நினைவுகளைக் கிளறி நிழலாடச் செய்து மனதை மருகவைத்தது. சாலையில், நினைவுகள் சுழன்றோட வழியிடை பயணத்தில் நண்பர்கள் சேர்ந்து கொள்ள நேரே எங்களின் முதல் சந்திப்பு அன்றைய பொழுதில் கோட்டார் ரயில் நிலையத்தில் அமைந்தது.

நான், நவீன், கமலேஷ், சுப்பிரமணி, கார்த்திக், சொக்கலிங்கம் எனப் பள்ளி நண்பர்களின் கூட்டாய் அமைந்தது அந்தப் பயணம்.

நேரே 7.45க்கு திருவனந்தபுரம் நோக்கி ரயில் நகர்ந்தது.... வழியில் சாளர வெளியில் குமரி மாவட்டத்திற்கே உரிய அழகு நீர்நிலைகள் அங்கொன்றும் இங்கொன்றுமாய் கடந்து செல்ல சாளர காற்றும் எங்கள் பயணத்திற்கு அழகு கூட்டியது.. பள்ளிகாலத் தோழர்கள் பலநாட்களுக்குப் பின் சந்தித்ததால் பேசி கழிக்கப் பல விஷயங்களும், கேலிகளுமாய் நகர்ந்தது பயணம். அன்றைய நாளின் பயணம் "மடவூர்பாறா குடவறை கோயிலை" நோக்கியதாக இருந்தது. இடத்தைப் பரிந்துரைத்த நண்பன் சுய அலுவலால் வராமல் போக, மலையாள கரையின் மலைக்குப் போகும் பொறுப்பை நண்பர்கள் என் கையில் கொடுத்திருந்தனர்.

ஒருவழியாக ரயில் பயணம் 10.15க்கு திருவனந்தபுரம் தம்பானூர் பேருந்து நிலையத்தில் முடிந்தது. அங்கிருந்த சிற்றுண்டி கடையில் எங்களின் காலை பசிக்கு "கேரளா பரோட்டா"வும் கடலைகறியுமாக கேரளா வாசத்துடன் தொடங்கியது... பின்னர் நேரே "மடவூர்பாறா" (Madavoorpara) பேருந்து எங்கே கிடைக்கும்? என தேடிக் கொண்டே திரியப் பலரும் "அறியில்லா" என்று மலையாளத்தில் கூறினர்.

ஒருவழியாக "முடவூர்பாறா அல்லே" என்று ஒருவர் கேட்க நாங்கள் "Madavoorpara" என்று கேட்க நடத்துநர் "அந்த பஸ் செல்லும்" என்றதும் நம்பிக்கையில் ஏறி அமர்ந்தோம்... முக்கால் மணி நேரப் பயணத்தின் பின் வெடிவெச்சான் கோயிலின் அடுத்த நிறுத்தத்தில் இறங்கியபோது தான் தெரிந்தது. அந்த இடத்தின் பெயர் முடவூர்பாறா (Mudavoorpara) ஏமாற்றத்தால் மீண்டும் நேரே தம்பனூர் பேருந்து நிலையம் நோக்கி விரைந்தோம்.



மலையாள உச்சரிப்பின் சிறுபிழை கூட மலையளவு தவறாகலாம் என்பதை உணர்ந்ததுதான் அங்குக் கிடைத்த பாடம். பயணத்தில் ஒருவரிடம் விசாரிக்க அவர் "மடவூர்பாறா சிவன் ஷேஸ்திரம் அல்லே" என்று வினவி அதற்கு பொத்தன்கோடு பஸ்ஸை பிடிங்க என்று வழிகூறினார்.

"நன்னி" கூறிவிட்டு எங்கள் நிறுத்தத்தில் இறங்கி நேரே ஒரு கி.மீ. நடையில் *Eastport* வந்து அங்கிருந்து "மடவூர்பாறா"விற்கான பேருந்தை பிடித்தோம்... ஒருவழியாக *1* மணியளவில் அவ்விடம் வந்தது. சில்லேன்ற நீர் வாங்கிப் பருகியபோது தான் எங்கள் ஏமாற்றம் மறைந்தது..

அந்த மடவூர்பாறை சிவன் கோயில் இருந்த இடத்தை... சிறிது நடையில் வந்தடைந்தோம் முதலில் நேரே அந்தச் செங்குத்து மலையில் கயிற்றை பற்றி ஏற, சிறுதிகில் உணர்வைத் தந்தது அந்த மலைக்குச் சிறிது இறக்கத்தில் இருந்த அந்தப் பூங்கா பச்சையம் பூசி, வெயிலில் பார்க்க அழகாய் இருந்தது... பின் அங்கு தொல்லியல் துறையின் சார்பில் அமைக்கப்பட்ட அந்த மரபாலம் ... மூங்கில் கழைகளால் கேரளா கட்டிட பாணியில் எழிலாக வடிவமைக்கப்பட்டிருந்தது.... ஆங்காங்கே சிறுகுடில்கள் நேர்த்தியாக அமைக்கப்பட்டிருந்தது.

அந்தப் பாலத்தின் உச்சியில் இருந்து பார்த்தால் திருவனந்தபுரம் நகரம் பெரும்கானகம் போலத்தான் காட்சியளித்தது. ரம்மியமான ஒரு அழகு. பின் சிறிது நேரத்தில் கீழே இறங்கி சில சுயமிகள் எடுத்துவிட்டு நேரே சிவன் கோயில் எங்கிருக்கிறது? எனக் கேட்டு இறங்கினோம்.

கோயில் செல்வதற்காக, வலப்புறம் அமைந்துள்ள ஒற்றையடிப் பாதையை பின்தொடர்ந்த போது சிறிது தொலைவில் தென்பட்டது பெரும் கொட்டகை போட்டபடி ஒரிடம் அங்கே பல சாமி புகைப்படங்கள் அணிவகுத்தது... அதற்கும் பின்னே நான் எதிர்பார்த்துக் காத்திருந்தது இருந்தது. ஆம் "மடவூர்பாறை குடைவரை கோயில்" என்னை வரவேற்றது.



ஆம் நான் தேடி வந்த கட்டுமானம், முதலில் பாறையில் செதுக்கப்பட்ட கற்படிகளில் மேலேறிச் சென்றபின் தான் தெரிந்தது. அந்தக் குடவரை இப்பொழுது இரும்பு கதவுகளுக்கு அப்பால்... கதவுகளின் அருகே இருந்து பார்த்தபொழுது அங்கிருந்த அந்தச் சுவரில் அழகிய கல்புடைப்புகள் கண்ணில் பட்டது. மொத்தம் உள்ளே மூன்று புடைப்பு சிலைகள் இருந்தன. இரு ஆண் வீரர்களின் புடைப்பும் அது துவார பாலகர்களாக இருக்கலாம். ஆனால் அவை காலத்தால் பழைமையானவை என அவற்றின் சிதலடைந்த நிலையே சாட்டியம் கூறியது. அங்கு வலப்புற சுவற்றில் இருந்த



விநாயகரின் புடைப்பு சிற்பம் இது பல்லவர் காலத்திற்குப் பிற்பட்டது என யூகிக்க இடமளித்தது... ஆனால் அவரின் எழில் தனித்துவமானது.

8-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த அந்தக் குடவரையின் முன்னே மிகவும் பிற்கால தமிழ் எழுத்துகள் இருந்தது. பார்த்ததுமே அவை, "தமிழ் எழுத்துகள்"தான் என்று உணரமுடிந்தது மற்றும் வெளியே கோடுகளால் பல சிறு சிறு வேலைப்பாடுகள் அந்தப் பாறையில் செய்யப்பட்டிருப்பதைப் பார்த்தேன்.
ஆனால் உள்ளே இருந்த கருவறை பூட்டப்பட்டிருந்தது ஏமாற்றத்தைத் தான் தந்தது. உள்ளே லிங்க திருமேனி இருப்பதாகக் கூறினர். தொல்லியல் துறையின் கையில் உள்ளதால் விஷேச தினங்களுக்கு மட்டும் தான் திறக்கப்படும் எனப் பின்னர் அறிந்துகொண்டேன்.

முன்பு, சமணமோ பௌத்தமோ தழைத்த அந்த குடவரை பகுதியில் இன்று சொல்லி கொள்ளும் அளவில் அவர்கள் யாரும் இல்லை. இப்போது சிவன் கோயில் அமைதியாக ஆள் அரவமின்றி இருக்கிறது. பின் சிறிது நேரம் அந்த புடைப்புகளை ரசித்துவிட்டு நகர்ந்தேன். குடவறை முன் புதிதாக அமைக்கப்பட்ட நந்தி புதுவரவை பறைசாற்றி நின்றது. பின் நேரே அவ்விடம் விட்டு நகர்ந்தோம் நேரே திருவனந்தபுரம் விலங்குகள் காட்சிச் சாலை சென்று விலங்குகளை ரசிக்கத் தொடங்கினோம்.

எனக்கு ஏனோ அங்கிருந்த விலங்குகளின் கண்களில் பரிவு தான் தெரிந்தது .. பாவம் பலநாள் அடைபட்டதால் வந்த வேதனை ஒவ்வொரு பறவையின் கண்களிலும் அடைபட்ட வேதனை அப்பட்டமாகத் தென்பட்டது. நடக்கும் அந்த வயதான புலி தான் இயலாமையைக் காட்ட அந்த கூண்டையே சுற்றிச் சுற்றி வந்தது... விலங்கியல் பூங்காவைச் சுற்றிவிட்டு நேரே பாம்பு வகைகளையும் பார்த்துவிட்டு திருவனந்தபுரம் இரயில் நிலையத்தில் 6 மணியளவில் பெருங்கூட்டத்துடன் நாகர்கோயில் நகரை நோக்கி நகர்ந்தோம்.

# வெள்ளத்தை ஆண்ட பாண்டியர்கள்



**கிணறு, கால்வாய், குளம் போன்றவை நீர்பாசனத்திற்கு பயன்படுத்தப்பட்டது. கால்வாய்ப் பாசனம் ஆறுகளை ஒட்டி அமைந்த நிலங்களுக்கு பயன்பட்டது. மேலும், அணைகளிலிருந்து நீர் கால்வாய்கள் மூலமாக நிலங்களுக்கு வழங்கப்பட்டது.**

**கிணறு நீர் தோட்டங்களுக்கு பயன்பட்டது. ஆண்டுதோறும் நீர் நிலைகளிலுள்ள வண்டல் மண்ணை வெளியேற்றப்பட்டு, ஆழப்படுத்தப்பட்டு, கரைகள் உயர்த்தப்பட்டு பராமரிக்கப்பட்டதால் மழைக்காலங்களில் நீர் தேக்கிவைப்பது சிரமமில்லாமலும் நீர் பற்றாக்குறை ஏற்படாமலும் தடுக்கப்பட்டுள்ளது.**

**முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியனின் கல்வெட்டு ஒன்று தஞ்சாவூர் மாவட்டம், திருக்குவளை தியாகராசர் கோயிலில் காணப்படுகிறது. அக்கல்வெட்டில் சந்திரமௌலி பேராற்றில் வெள்ளம் ஏற்பட்டது என்றும், எதிர்காலத்தில் வெள்ளம் ஏற்படாதவாறு அந்தப் பேராற்றிலிருந்து கால்வாய்கள் வெட்டி அதிகப்படியான தண்ணீர் வெளியேற்றப்பட்டது என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.**

**இவ்வாறு பாண்டியர் காலத்தில் நீர்பாசனம் எத்தகைய சிறப்பாக அமைக்கப்பட்டிருந்தது என்பதை அறியலாம்.**



# பல்லவர் செப்பேட்டில் பெண்கள்

## – நாவலாசிரியர் க. சீனிவாசன்



பெண், பார்ப்பதற்குச் சிறிய சொல்லாகத் தெரியும் ஆனால் இந்தச் சிறிய சொல்லினால்தான் இந்த உலகம் இயங்கி கொண்டிருக்கிறது, ஏன்? இந்த உலகம் தோன்ற காரணமாக இருந்ததும் பெண்கள்தான். பெண் என்பவள் யார்? அன்பின் முழு உருவமா? தியாக சிகரமா? நாம் துவண்டுபோன நேரங்களில் எல்லாம் நமக்கு நம்பிக்கை தரும் இறைவியா? இல்லை இந்த மூன்றும் கலந்தவள் தான் என்றும் கூறலாம், சில நேரங்களில், பெண் தெய்வமே தாய், மனைவி, தோழி, தங்கை என்ற ரூபத்தில் நம்முடன் வாழ்ந்து வருகின்றனர். *"Behind every successful man there is a woman."* ஒவ்வொரு ஆணின் வெற்றிக்குப் பின் ஒரு பெண் உண்டு என்ற ஆங்கிலத்தில் ஒரு பழமொழி உண்டு,

இந்தப் பழமொழி எப்பொழுதிலிருந்து பழக்கத்தில் உள்ளது என்பது தெரியாது. ஆனால் இந்தப் பழமொழி தோன்றுவதற்கு முன்பே, அதாவது ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே நம் முன்னோர்கள் பெண்களைத் தெய்வமாக கருதியுள்ளனர். பெண்கள் உயர்ந்த நிலையில் சுயமரியாதையுடன் இருந்துள்ளனர். அதற்கு சான்றாக, இந்த பல்லவர் கால செப்பேடு உள்ளது.

சாருதேவியின் குணபதேயம் செப்பேடு

இந்த செப்பேட்டின் கதை சற்று விந்தையான ஒன்று. ஆந்திராவில் குண்டூர் மாவட்டத்தில் குணபதேயம் என்னும் இடத்தில் ஆங்கிலேய ஆட்சியின் போது *"Walter Elliot"* என்ற ஆங்கில அரசு அதிகாரிக்கு இந்த செப்பேடு கிடைத்துள்ளது, செப்பேட்டில், சமஸ்கிருதம் மற்றும் பிராகிருத எழுத்துக்களில் எழுதப்பட்ட வரிகள் இருந்தன. அவற்றை மொழிப்பெயர்த்து அதிலிருந்த செய்தியைக் கண்டு வியந்து அந்த செப்பேட்டை தன்னுடன் இலண்டன் நகரத்திற்கு எடுத்துச் சென்று விட்டார்.

தற்பொழுது இந்தச் செப்பேடு லண்டன் அருங்காட்சியகத்தில் உள்ளது. அதில் என்ன செய்தி இருக்கும். செப்பேடு தோன்றிய காலம் கி.பி.350. செப்பேட்டை வழங்கியது சாருதேவி. பல்லவ அரசனாக இருந்த ஸ்ரீவிஜயபுத்தவர்மனின் மனைவிதான் இந்த சாருதேவி. தன் மனைவி விவசாயி ஒருவனுக்கு வழங்கிய நிலதானத்தை செப்பேட்டில் எழுதியுள்ளார் பல்லவ அரசர் ஸ்ரீவிஜயபுத்தவர்மன். அதிலும் தன் மனைவியின் தானம் இது என்று குறிப்பிட்டுள்ளார் என்றால், தன் மனைவியை ஒரு உயர்ந்த ஸ்தானத்தில் வைத்தும், பெண்களின் முக்கியத்துவத்தை மூன்றாம் நூற்றாண்டிலேயே நமக்கு உணர்த்தியுள்ளார்.

ஒரு அரசனுக்குப் பல செப்பேடுகள் இருக்கலாம். ஆனால் ஒரு அரசிக்குத் தனியாக ஒரு செப்பேடு இருந்துள்ளது என்பதை நினைக்கும்போது நம் தமிழ் மக்கள் பெண்களை தெய்வமாகக் கருதியுள்ளனர் என்பதற்கு இதைவிட வேறென்ன சான்று வேண்டும். இதேப்போன்று பல செப்பேடுகள் பெண்களின் மகத்துவத்தைப் போற்றும் விதத்தில் இருந்து இருக்கலாம். காலப்போக்கில் அவை

மறைந்திருக்கும். நம் முன்னோர்கள் விட்டுச் சென்ற ஒவ்வொரு கல்வெட்டிலும் செப்பேட்டிலும் ஒரு செய்தி உள்ளது. அதை அடுத்த தலைமுறைக்கு கொண்டு சொல்லவேண்டியது நம் கடமை.
செப்பேட்டுச் செய்தி

இந்தச் செப்பேட்டில் எத்தனைச் செய்திகள்

ஸித்தம் ஸ்ரீ விஜயஸ்கந்தவர்மனுடைய ஆட்சியாண்டு யுவமகராஜனும் பாரத்வாஜ கோத்திரத்தில் பிறந்தவனும் பல்லவ வம்சத்தை சேர்ந்தவனுமான ஸ்ரீவிஜயபுத்தவர்மனுடைய மனைவியும் அங்குரன் என்பவனின் தாயுமான சாருதேவியின் கட்டளை இது.
ராஜதடாகத்தில் அருகிலுள்ள குடிநீர் கிணற்றின் வடபுறம் ஆதுகன் என்பவன் இப்பொழுது பயிரிட்டு கொண்டு இருக்கும் நிலத்தை தாமாலுரில் உள்ள காளி மகத்தரக நாராயணனுக்கு என்னுடைய அரசி சாருதேவியின் ஆயுள் வளர்ச்சிக்கு நான்கு நிலம் தானமாக வழங்கப்படுகிறது.

இந்த விவரத்தை ஊர்மக்களும் அதிகாரிகளும் தெரிந்து கொள்ள வேண்டும், இந்த நிலத்திற்கு எல்லா வரிவிலக்கும் தரவேண்டும், யாரவது இந்த நிலத்தை சொந்தம் கொண்டாடினால் அவர்களை ஊர் மக்கள் அப்புறப்படுத்த வேண்டும்.

பலர் நிலதானம் செய்து இருக்கிறார்கள், பலர் அடுத்தவர் செய்த நிலதானத்தை காப்பாற்றி இருக்கிறார்கள், யார் யார் எந்த அளவிற்கு நிலத்தை தானம் செய்தும் நிலத்தை காப்பாற்றியும் இருக்கிறார்களோ அவர்களுக்கு புண்ணியம் கிடைக்கும். தான் கொடுத்ததோ இல்லை அடுத்தவன் கொடுத்ததோ எதுவாயினும் தானம் கொடுத்த நிலத்தை அபகரித்தவன் லட்சம் பசுக்களை கொன்ற கொடுஞ்செயலை செய்தவன் ஆவான்.

மற்ற செப்பேடுகளுக்கும், இந்தச் செப்பேட்டிற்கும் ஒரு வித்தியாசம் உள்ளது. பொதுவாகவே செப்பேடுகளில் ஸ்வஸ்திஸ்ரீ என்று தான் தொடங்கும். அதன் பின் அரசரின் வம்சத்தைப் பற்றி குறிப்பிடும். இந்தச் செப்பேட்டில் அவ்வாறு இல்லை. ஆரம்பமே ஸித்தம் (நிறைவேற்றப்படுவதாக) என்று தான் ஆரம்பிக்கிறது. பிறப்பில் இருந்து இறப்பு வரை பல தியாகங்களை செய்தும், ஆண்களுக்கு உற்ற துணையாகவும், தாயாகவும், நம்மை நல்வழிப்படுத்தும் பெண்களுக்கும் இந்தச் செப்பேடு ஒரு சமர்ப்பணம்.

எழுத்து-நான்
செப்பேட்டின் செய்தி - பல்லவர் கால செப்பேடுகள்

# தமிழ் வணிகர்கள்



**பாண்டியர் ஆட்சிக் காலத்தில், வணிகர்கள் பற்பல பிரிவுகளாக பிரிக்கப்பட்டிருந்தனர். நெல், பருப்பு போன்ற தானியங்களை விற்பவர்களை கூல வணிகர்கள் என்றும், உப்பு விற்கும் வணிகர்களை உமணர்கள் எனவும், துணி விற்றவர்களை அறுவை வணிகர்கள் எனவும், வெற்றிலை விற்றவர்கள் இலைவணிகர் என்றும், செக்கு வணிகர்கள் என்று எண்ணெய் விற்பவர்களையும், குதிரைகள் விற்கும் வணிகர்களை குதிரைச் செட்டிகள் என்றும் அழைத்ததோடல்லாமல், இவர்கள் வணிகராதித்தன், எட்டி என்ற பட்டப் பெயர்களாலும் அழைக்கப்பட்டனர். மேலும் முத்து மற்றும் நவமணிகளை விற்பவர்களை மணி வணிகர்கள் என்றும் அழைத்தனர்.**

**திசையாயிரத்து ஐந்நூற்றுவர் என்பது வணிகர்களை குறிப்பதாகும். இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள பிரான்மலையில் உள்ள கல்வெட்டில், திசையாயிரத்து ஐந்நூற்றுவர்களை "பூமி தேவியின் குழந்தைகள்" என்றும் "ஐம்பொழில் பரமேசுவரியின் குழந்தைகள்" என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் இக்கல்வெட்டின் வாயிலாக அவர்கள் 18 பட்டினங்களிலும், 32 வளர்புரங்களிலும், 64 கடிகைத்தாவளங்களிலும் வாழ்ந்தனர் எனவும், திசையாயிரத்து ஐந்நூற்றுவர் பிரிவில் பல உட்பிரிவுகள் இருந்ததாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது. அக்கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ள பத்து பிரிவினர் செட்டிநாட்டில் வாழும் நகரத்தார்களே ஆவார்கள்.**

**சோழர்கள் காலத்தில் திசையாயிரத்து ஐந்நூற்றுவர் மன்னருக்கு இணையான உரிமைப் பெற்றவர்களாகவும், அவர்களுக்கு தூதுவர்களாகவும் செயல்பட்டார்கள்.**



# வேலூரின் பன்முகத் தன்மை மக்கள் தர்கா

**– இராசு. சரவணன் ராஜா, வேலூர்.**



வேலூர் கோட்டை மைதானத்தின் தெற்கு மூலையில் அஜ்ரத் ஸைதானிபீ அம்மாள் தர்கா (*Shrine of Hazarath Sydabibee bee*) அமைந்துள்ளது.

இதனை முழுவதும் பணம் மற்றும் உடலுழைப்பு செய்து கட்டியவர்கள் இந்துக்கள் என்பது சிறப்பு தகவல்.

வேலூர் மாநகரில் பிறந்த குழந்தைகள் உடல்நலம் குன்றினால், சைதாபுரி அம்மனை வணங்கக் குழந்தை உடல் நலமாகும் என்பது எல்லாத் தரப்பு மக்களிடமும் உள்ள சொல் வழக்கு. இங்குக் குழந்தைகளுடன் வரும் அனைத்து மத மக்களே இதற்குச் சாட்சியாக உள்ளனர்.

அஜ்ரத் ஸைதானிபீ அம்மாள் என்பவர் இந்த இடத்தில் உயிருடன் சமாதி நிலை அடைந்தார். வேலூர் நகர வியாபாரிகள் அந்தச் சமாதியை வழிபாடு செய்ய, தர்காவாகக் கட்ட முடிவு செய்து, லட்சுமண முதலியார் தலைமையில் அப்போதைய ஆங்கிலேய கலெக்டரை சந்தித்து அனுமதி பெற்று 1906 கட்டத் துவங்கி, 1927ல் கட்டி முடித்துள்ளனர்.

தர்கா உள்ளே, சமாதி அருகே, இந்தத் தகவலை கல்வெட்டாக வடித்து வைத்துள்ளனர்.






கல்வெட்டு தகவல்:

கடவுள் துணை

கடைக்கால் ஆரம்பம் 16-10-1909. இதனால் சகலமான கனவான்களும் தெரிந்து கொள்வது யாதெனில் இவ்வேலூரின் கண்புறாதினமாய் சமாதி அடைந்து எழுந்தருளி எங்கும் பிரபலமாய் வழங்கி வரும் சைதா பீபீ அம்மனுக்கு ஸ்ரீ கலெக்டர் துரை அவர்களால் கொடுக்கப்பட்ட உத்தரவைப் பெற்று நெடுநாளாய் கட்டடம் இல்லாது இருந்ததை, வேலூர் கலாஷ் தாதா வீதி மார்க்கெட் சில்லறை கடை வி.தா.லட்சுமண முதலியார் முன்னின்று தான் யசாகம் செய்தும், வியாபாரிகள் பொருள் உதவியைக் கொண்டு கட்டிடத்தைப் பூர்த்தி செய்தனர்.

மேஸ்திரி குப்புசாமி முதலியார் சலவன்பேட்டை, தங்கள் அன்புள்ள ஊழியன் விரிஞ்சிபுரம் தர்மலிங்க முதலியார், கல்தச்சர் வேலை துரைசாமி நாயகர் கொசப்பேட்டை, லட்சுமண முதலியார் தர்மகர்த்தா சில்லறைக் கடை வேலூர்.

மதநல்லிணக்கத்தை பேணிவரும் இடமாக, இன்றும் பலர் நம்பிக்கையுடன் நாடி வரும் இடமாக உள்ளது.

# தமிழர் திருமணச் சடங்குகள்



அகநானூறு, தொல்காப்பியம், சிலப்பதிகாரம், பெருங்கதை, ஆண்டாள் பாடல்கள், சூளாமணி, கந்தபுராணம், திருவிளையாடற்புராணம், பெரியபுராணம் போன்ற நூல்களின் வாயிலாகவும், திருமண சடங்குகளை நம் முன்னோர்களால் ஓவியங்களாக, சிற்பங்களாக வடிவமைத்துள்ளதன் வாயிலாகவும், முற்காலத்தில் நடைபெற்ற திருமண சடங்குகளைப் பற்றி நாம் அறியலாம். அகநானூறு பாடல், திருமணத்தின் போது மணமக்களை பூக்கள் மற்றும் அரிசி கலந்த நீரில் குளிப்பாட்டுதல், மணமக்களுக்கு புதிய ஆடை உடுத்துதல், ஆபரணங்கள் அணிவித்தல், மங்கள இசைக் கருவிகள் வாசித்தல், விருந்துண்ணுதல், நெல் மற்றும் பூவை மணமக்களின் மேல் தூவி ஆசிர்வதித்தல் போன்ற திருமண சடங்குகள் நிகழ்ந்ததாக கூறுகிறது.

கண்ணகி கோவலன் திருமணத்தில், மணமக்கள் தீயை வலம் வரும் சடங்கு நடைபெற்றதாகவும், அந்தணர்கள் திருமணத்தை செய்து வைத்தாகவும் சிலப்பதிகாரம் எடுத்தியம்புகிறது. கந்தபுராணம், திருவிளையாடற் புராணம் மணமகளின் கழுத்தில் மங்களநாண் அணிவிக்கும் வழக்கம் இருந்ததாக குறிப்பிடப்பட்டுள்ளது. திருமணத்தின் போது பந்தல் அமைத்தல், வாயிலில் தோரணம் கட்டுதல், மங்கள இசை கருவிகள் வாசித்தல், மணமக்களை குளிப்பாட்டுதல், புத்தாடை மற்றும் அணிகலன் அணிவித்தல், காப்பு கட்டுதல், தாரைவார்த்து கொடுத்தல், தாலி அணிவித்தல், தீயை வலம்வருதல், விருந்துண்ணுதல் போன்ற சடங்குகள் நடைபெற்றதாக அறியமுடிகிறது.

# அருங்காட்சியகம் அமைப்போம்

## – எழுத்தாளர் விழுப்புரம் கோ. செங்குட்டுவன்

பல்லவர்களின் முதற்குடைவரை, மண்டகப்பட்டு.

"விஞ்ஞான முறையில் இந்திய வரலாறு ஒன்றை எழுதப்புகும் ஆசிரியர்கள் கிருஷ்ணா, காவிரி, வைகை ஆற்றங்கரைகளில் தான் முதன்முதல் தம் ஆராய்ச்சிகளைத் தொடங்க வேண்டுமே அன்றிக் கங்கைக் கரையினின்று" என்பார் பேராசிரியர் சுந்தரம்பிள்ளை அவர்கள். இதனையொட்டி, "இந்திய வரலாற்றாராய்ச்சியைத் தென்னிந்தியாவில் தான் தொடங்க வேண்டும்" என்பது ஆய்வறிஞர் கே.கே. பிள்ளை அவர்களின் கருத்தாகும்.

இதில் மாறுபட்டக் கருத்தில்லை. அதே நேரம் நடுநாடு என்றும் தொண்டை மண்டலம் என்றும் அழைக்கப்பட்டப் பகுதி, வரலாற்றுக்கு எந்த வகையிலும் சளைத்ததில்லை. கூடுதலான வரலாற்றுத் தடயங்களும் இங்குள்ளன என்பதும் குறிப்பிடத் தகுந்தவையாகும்.

நடுநாட்டில், தொண்டை மண்டலத்தில் ஓடும் தென்பெண்ணை, கெடிலம் மற்றும் சங்கராபரணி ஆறுகளின் கரைகளில் இருந்துதான் தமிழர் வரலாறு எழுதத் தொடங்கப்பட வேண்டும். இதற்கான வலுவான ஆதாரங்கள் வரலாற்று ரீதியில் இருக்கின்றன.

சங்கராபரணி ஆற்றங்கரையில் அமைந்துள்ள திருவக்கரையில் 2 கோடி ஆண்டுகளுக்கு முற்பட்ட, உலகப் புகழ்பெற்ற கல் மரங்கள் காணப்படுகின்றன. மயிலம் அருகே உள்ள பொம்மையார் பாளையத்தில் ஒன்றரை லட்சம் ஆண்டுகளுக்கு முற்பட்டக் குழந்தையின் கற்படிமம் கண்டெடுக்கப்பட்டுள்ளது.

இதே ஆற்றங்கரையில் அமைந்துள்ள செ.கொத்தமங்கலத்தில், சங்ககாலப் பானை ஓடுகள் முதற் கொண்டு, நாயக்கர் காலச் சதிக்கற்கள் வரையிலான வரலாற்றுச் சின்னங்கள் நிறைந்துள்ளன. இரண்டாயிரத்து ஐநூறு ஆண்டுகள் வரலாற்றின் அறுபடாதத் தொடர்ச்சியை செ.கொத்தமங்கலம் கிராமத்தில் நாம் காணலாம்.

தென்பெண்ணை ஆற்றங்கரையில் அமைந்துள்ள கீழ்வாலை, ஆலம்பாடி உள்ளிட்டப் பகுதிகள் பாறை ஓவியங்களுக்குப் புகழ்பெற்றவைகளாகும். இந்த ஓவியங்கள் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டவை. சிந்துவெளி நாகரிகத்துடன் தொடர்புடையவை. இந்திய ஓவியக்கலை வரலாற்றில் முக்கிய இடம் பிடித்திருப்பவை.


குந்தவைக் கட்டிய வைணவ ஆலயம், தாதாபுரம்.


செஞ்சிக் கோட்டை

மூன்றாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டத் தாய்த் தெய்வத்தின் அடையாளச் சின்னத்தை உடையாநத்தம் கிராமத்தில் நாம் பார்க்கலாம். திருக்கோவலூர் அருகே உள்ள கோட்டகம் கிராமத்தில் கி.பி.முதல் நூற்றாண்டு ரோமானியக் காசுகள் கண்டெடுக்கப்பட்டன என்பதும் இங்குக் குறிப்பிடத்தகுந்ததாகும்.

சங்க இலக்கியங்களில் பாடப்பெற்ற திருக்கோவலூர், மரக்காணம், கிடங்கில், கீழ்மாவிலங்கை ஆகிய ஊர்கள் விழுப்புரம் மாவட்டத்தில் இடம்பெற்றுள்ளன.

கடையெழு வள்ளல்களில் ஒருவரானத் திருமுடிக்காரியும், சிறுபாணாற்றுப் படையின் பாட்டுடைத் தலைவன் நல்லியக் கோடனும் விழுப்புரம் மாவட்டத்தைச் சேர்ந்தவர்களாவர்.

பல்லவர்களின் முதற்குடைவரைக் கோயில் விழுப்புரம் மாவட்டத்திலுள்ள மண்டகப்பட்டுக் கிராமத்தில் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. தமிழ்நாட்டில் எஞ்சி நிற்கும் ஒரே பல்லவ ஓவியமாகப் பனைமலையில் உள்ள தாளகிரிசுவரர் கோயில் ஓவியம் திகழ்கிறது.

சோழர்காலக் கலைச்சின்னங்கள் மாவட்டம் முழுவதும் காணப்படுகின்றன. இதில், எசாலம், எண்ணாயிரம், பிரம்மதேசம், தாதாபுரம், திருமுண்டீச்சுரம், சேந்தமங்கலம், பேரங்கியூர் உள்ளிட்டப் பகுதிகளில் அமைந்துள்ளக் கோயில்கள் குறிப்பிடத்தக்கன.

விழுப்புரம் அருகே உள்ள எண்ணாயிரம் கிராமத்தில், சோழர் ஆட்சியில் மிகப்பெரிய வேதக்கல்லூரி நடந்திருக்கிறது. எசாலம் கிராமத்தில் கண்டெடுக்கப்பட்ட செப்பேடு, சோழர் வரலாற்றில் முக்கிய இடம் பிடித்துள்ளது. சேந்தமங்கலத்தைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி நடத்திய காடவராயர்கள் குறிப்பிடத்தகுந்தவர்கள். இங்குள்ளக் (கோட்டை) கோயிலும், இசைக்கும் கற்குதிரைச் சிற்பமும் குறிப்பிடத்தகுந்தன.

தமிழ் எழுத்தின் வரலாற்றை, வளர்ச்சியைக் காட்டும் தொன்மை தமிழ் எழுத்துகள் ஜம்பை, தொண்டூர், பெருமுக்கல், திருநாதர் குன்று ஆகிய இடங்களில் நாம் காணலாம். அசோகனின் சாசனங்களில் குறிப்பிடப்படும் "சதியபுதோ" என்பவர்கள் யார் எனும் வினாவிற்கு, ஜம்பைக்கல்வெட்டு விடை தந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

பல்லவர் காலம் முதற்கொண்ட வரலாற்றுச் சிறப்புமிக்க நடுகற்கள், கல்வெட்டுகள் விழுப்புரம் மாவட்டத்தின்


மாணவர்களுடன்


களப்பணியில்


தீர்த்தங்கரர் சிற்பத் தொகுதி, திருநாதர்குன்று.


கல்மரங்கள், திருவக்கரை

பல்வேறு பகுதிகளிலும் காணப்படுகின்றன.

எளிதில் அணுக முடியாதக் கோட்டை என வர்ணிக்கப்பட்ட செஞ்சிக்கோட்டை, தமிழக வரலாற்றில் குறிப்பிடத்தக்கதாகும். தியாகதுருகம், வழுதாவூர், பெருமுக்கல் உள்ளிட்ட இடங்களிலும் கோட்டைக் கொத்தளங்கள் காணப்படுகின்றன.

நாலாடியாரை இயற்றியப் புலவர்கள், தேவார மூவரில் ஒருவரான சுந்தர மூர்த்தி நாயனார், சிவஞான போதம் அருளிய மெய்கண்ட நாயனார், கம்பனுக்கு உதவிய சடையப்ப வள்ளல், கவிகாளமேகம், காஞ்சிப் பெரியவர் ஸ்ரீசந்திர சேகரேந்திரர், உரைவேந்தர் அவ்வை துரைசாமிப் பிள்ளை, நடிகர் திலகம் சிவாஜி கணேசன் ஆகியோரும் இம்மண்ணுக்கு உரியவர்களே. இங்குள்ள திருக்கோவலூர், நாலாயிர திவ்விய பிரபந்தத்தின் பிறப்பிடமாகவும், அட்ட வீரட்டங்களில் ஒன்றாகவும், நூற்றியெட்டு திவ்விய தேசங்களில் ஒன்றாகவும் இருக்கிறது. பாடல்பெற்ற சைவ, வைணவத் தலங்கள் விழுப்புரம் மாவட்டத்தில் அமைந்துள்ளன.

சமண முனிவர்கள் வாழ்ந்தக் கற்படுக்கைகள் மற்றும் சமணச் சின்னங்கள் மாவட்டத்தின் பல்வேறு பகுதிகளில் காணக் கிடைக்கின்றன. திகம்பரப் பிரிவு சமணர்களின் தலைமையிடமாக, செஞ்சி அருகே

தொல்பழங்காலப் பாறை ஓவியங்கள், கீழ்வாலை.



பல்லவர் ஓவியம், பனைமலை.

உள்ள மேல்சித்தாமூர் திகழ்கிறது.

வரலாற்றுச் சிறப்புமிக்க விழுப்புரம் மாவட்டத்தில், தமிழர்களின் வரலாறு மற்றும் பண்பாட்டிற்குச் சான்றுகளாக விளங்கக் கூடிய ஏராளமான தொல்பழங்காலப் பொருள்கள் தென்பெண்ணை, சங்கராபரணி ஆற்றங்கரைகளில் கண்டெடுக்கப் பட்டுள்ளன. கண்டெடுக்கப்பட்டும் வருகின்றன.

இவற்றைப் பாதுகாக்கவும், வருங்காலத் தலைமுறையினருக்குக் காட்சிப் படுத்தவும், அருங்காட்சியகம் எனும் அமைப்பு விழுப்புரம் மாவட்டத்தில் இல்லை. இதற்கான முயற்சிகளை எழுத்தாளர் கோ.செங்குட்டுவன் 2005ஆம் ஆண்டில் முன்னெடுத்தார். அப்போதைய மாவட்ட ஆட்சியர் திரு.கா.பாலச்சந்திரன் இ.ஆ.ப. இதில் மிகுந்த ஆர்வமும் அக்கறையும் செலுத்தினார். தற்காலிக அருங்காட்சியகம் அமைக்கப்படும் எனும் அறிவிப்பும் வெளியானது. ஆனாலும், இம்முயற்சிகள் முற்றுப்பெறவில்லை. தற்போது அதற்கான முயற்சிகள் மீண்டும் முன்னெடுக்கப்பட்டு வருகின்றன. பல்வேறு சமூகப் பண்பாட்டு அமைப்புகளை ஒருங்கிணைத்து, "அருங்காட்சியகம் அமைப்பு - கூட்டமைப்பு" உருவாக்கப்பட்டு பல்வேறு நடவடிக்கைகள் முன்னெடுக்கப்பட்டு வருகின்றன.

விழுப்புரம் மாவட்டம், தனி வருவாய் மாவட்டமாகி 25 ஆண்டுகளாகிறது. இதிலிருந்துப் புதிய மாவட்டம் ஒன்றும் உருவாவதற்கான அறிவிப்பும்கூட வந்து விட்டது. இந்நிலையில் இங்குள்ள வரலாற்றுச் சின்னங்களைப் பாதுகாக்க வேண்டிய கடமையும் பொறுப்பும் தமிழக அரசுக்கு இருக்கிறது. இங்கு, அருங்காட்சியகம் அமைக்கப்பட வேண்டும் என்பது வரலாற்றுத் தேவையாகும்.

வரும் தமிழக சட்டமன்றக் கூட்டத்தில், நிதிநிலை அறிக்கையின்போது, "விழுப்புரம் மாவட்டத்தில் அருங்காட்சியகம் அமைக்கப்படும்" எனும் வரலாற்றுச் சிறப்புமிக்க அறிவிப்பு வரும் எனும் நம்பிக்கையுடன் காத்திருக்கிறோம்.

**கட்டுரையாளரின் வெளியீடுகள்:**

**1. விழுப்புரம் வரலாற்றுச் சுவடுகள் 2. வரலாற்றில் விழுப்புரம் மாவட்ட ஊர்கள் 3. நந்தன் கால்வாய் 4. கூவம் அடையாறு பக்கிங்காம் சென்னையின் நீர்வழித் தடங்கள் (கிழக்கு பதிப்பகம்) 5. மதுவிலக்கு நேற்று இன்று நாளை (கிழக்கு பதிப்பகம்) 6. சமணர் கழுவேற்றம் ஒரு வரலாற்றுத் தேடல் (கிழக்கு பதிப்பகம்) 7. பழைய பேப்பர் 8. அருங்காட்சியகம் அவசியமும் அவசரமும் 9. மக்கள் கவிஞர் பழமலய் 75 (பதிப்பாசிரியர்) 10. திணிக்கப்பட்டதா திராவிடம்?**



# கலர் மிட்டாய் செட்டிங்ஸ்..!

## – ஈசன் எழில்விழியன்

காளிப்பட்டி கந்தசாமி கோவில் தைப்பூசத் திருவிழாவில் கண்கொள்ளாக் காட்சி.

சேலம் நாமக்கல் மாவட்டத்தில் பிரசித்தி பெற்ற காளிப்பட்டி அருள்மிகு கந்தசாமி கோவில் உள்ளது. இங்கு தைப்பூசத் திருவிழா நடைபெறுவதையொட்டி கோவிலை சுற்றியுள்ள மைதானத்தில் ஏராளமான தற்காலிக கடைகள் அமைக்கப்பட்டுள்ளன.

குழந்தைககளுக்கான பொம்மைக்கடைகள், மகளிர்களுக்கான அணிகலன்கள் கடைகள், கரும்புச் சாறு, பஜ்ஜி, போண்டா கடைகள் இவற்றை எல்லாம் விட அங்குள்ள கலர் மிட்டாய்க் கடைகள் தான் வெகு பிரபலம்.

காரணம், அந்தக் கடைகளில் கலர் கலராக சர்க்கரை மிட்டாய்களைக் கோபுரம் போல அழகான கலர் காம்பினேஷனில் செட்டிங்ஸ் போல வரிசையில் அடுக்கி வைத்திருப்பது பார்ப்பதற்கு ஒரு கண்கொள்ளாக் காட்சியாகும்.

கலர் மிட்டாய் வியாபாரிகள் அங்கேயே கடைகளுக்கு பின்புறம் அடுப்பு வைத்து, தேங்காய், சர்க்கரை இவற்றைப் பாகு போலக் காய்ச்சி, வண்ணங்களைச் சேர்த்து சுடச்சுட மிட்டாய் தயாரித்து விற்பனை செய்கின்றனர். மிட்டாயும் பார்க்க அழகாகவும் சாப்பிட தித்திப்பாகவும் உள்ளது.

மிட்டாய்களைப் பேப்பரில் பொட்டலம் கட்டி பழையபடி பாரம்பரிய முறையில் தருகின்றனர். ஒவ்வொரு வருடமும் தைப்பூசத் திருவிழாவிற்கு வருகைதரும் ஆயிரக்கணக்கான பக்தர்கள் சாமி தரிசனம் முடிந்தவுடன் இந்த கலர்மிட்டாய்களை வீட்டிற்கு வாங்கிச் செல்வது கிராமிய மரபாகும்.

கோவில் திருவிழாவில் சாமி கும்பிட்டு விட்டு அங்குள்ள கடைகளை ஆனந்தமாகச் சுற்றிப்பார்த்து, குழந்தைகளுக்குப் பொம்மைகள் வாங்கித் தருவது, வீட்டிற்குச் சமையல் சாமான்கள் வாங்குவது, பஜ்ஜி சாப்பிடுவது, மிட்டாய் கடித்து தின்பது இதில் கிடைக்கும் சந்தோசமே தனி தான்.

# சவுடேஸ்வரி அம்மன் கோவில் திருவிழா

– A.T மோகன், சேலம்

சேலம் நகரின் மையத்தில் உள்ள, செவ்வாய்பேட்டை ஸ்ரீ ராமலிங்க சவுடேஸ்வரி அம்மன் கோவிலில் ரத்தம் சொட்டச் சொட்ட கத்திப்போடும் திருவிழா இந்தத் தை பொங்கல் நாளில் நடைபெற்றது.

சேலம் செய்வாய்பேட்டையில் ஸ்ரீ ராமலிங்க சவுடேஸ்வரி அம்மன் கோவில் உள்ளது. ஆண்டுதோறும் அம்மனை அழைப்பதற்காக இந்தக் கோவிலுக்குப் பாத்தியப்பட்ட 15 செட்டிமை மக்கள் கத்திப்போடும் திருவிழாவை நடத்துவர். இது தெலுங்கு, கன்னடம் பேசும் தேவாங்கர் குல பாரம்பரிய வழிபாடு ஆகும். இத்திருவிழா பல நூற்றாண்டுகளாக தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

அதேபோல் இந்த வருடம் பொங்கல் திருநாளில் ஐந்து நாள் திருவிழாவாக சவுண்டம்மன் கோவிலிலிருந்து இந்தக் கத்தி போடும் திருவிழா ஊர்வலம் துவங்கியது. இந்த ஊர்வலத்தில் கலந்து கொண்ட பக்தர்கள் "வேசுக்கோ... தீசுக்கோ..." என்று பாடிக் கொண்டும் ஆடிக்கொண்டும் கத்தியால் உடலை வெட்டிக் கொண்டே அம்மனை அழைத்தனர்.

இதனால் அந்தப் பக்தர்களின் உடலில் ரத்தம் வழிந்தோட ஆரம்பித்தது. ஆனாலும் அவர்கள் அதையெல்லாம் கண்டுகொள்ளவில்லை.

அந்த வெட்டுக் காயங்களின் மீது திருமஞ்சனப் பொடியை ஒற்றி வைத்துக் கொண்டு, தொடர்ந்து "வேசுக்கோ...தீசுக்கோ..." என்று ஆடிக்கொண்டே சென்றனர். இந்தப் பொடியை வைத்தால் மூன்று நாட்களில் காயம் சரியாகிவிடும் என்பது இந்தப் பக்தர்களின் அபார நம்பிக்கை. இந்த விழாவில் சக்தி அழைப்பு, ஜோதி அழைப்பு என விசேஷமாக






நடைபெறும். இந்த விழாவுக்காக அம்மனுக்குத் தனியாக பந்தல் அமைத்து அதில் வெல்லத்தால் செய்யப்பட்ட செங்கல்லால் சுவர் அமைத்து அதில் கரும்பினால் கூரை வேயப்பட்டு அங்கே அம்மனை பிரதிஸ்டை செய்வார்கள்.

ஊர்வலம் சவுடேஸ்வரி அம்மன் கோவிலில் முடிவடையும். அப்போது அம்மனுக்கு விசேஷ பூஜை நடத்தப்படும். தொடர்ந்து அம்மன் திருக்கல்யாணமும் நடத்தி வெல்லமும், கரும்பும் அனைவருக்கும் பிரசாதமாக வழங்கப்படும்.



# தமிழகத்துடன் கிரேக்க, உரோமானிய வணிகம்



– முனைவர் ஜோ. பிரின்ஸ்
அமெரிக்கன் கல்லூரி

ஐரோப்பாக் கண்டத்தின் தென் பகுதியில் மத்தியத் தரைக்கடலுக்கு அருகில் கிரேக்க நாடு இருக்கிறது. கி.மு.538ல் கிரேக்கத்திற்கும் பாபிலோனியாவிற்கும் இடையே நடைபெற்ற போரில் கிரேக்கம் வென்றது. பாபிலோனியா நகரம் அழிக்கப்பட்டது. இதனால் கிரேக்கம் தமிழகத்துடன் நேரடியாக வணிகத் தொடர்பு கொள்ளச் சுலபமாக இருந்தது. பர்சியா வளைகுடா வழியாகப் பாபிலோனிய வணிகர்கள் நடத்திய வணிகத்தைக் கிரேக்கர்கள் செங்கடல் வழியாக நடத்தலாயினர்.

அலெக்ஸாண்டரது காலத்தில் அலெக்ஸாண்டிரியா நகரம் வணிக மையாக (Trade centre) விளங்கியது. சூயஸ் கால்வாய் மரக்கலங்கள் செல்வதற்கு ஏற்றதாக ஆழப்படுத்தப்பட்டது. இதனால் தமிழ்நாட்டு வணிகர்கள் பாரசீக வளைகூடாவிற்கு செல்வதை விடுத்து நேரடியாக செங்கடலுக்குச் சென்றனர். பழங்காலத்தில் கிரேக்கர்களால் இந்தியாவிற்கு இரண்டு வழிகள் கண்டறியப்பட்டன.

1. கடல்வழி - அராபியக் கடற்கரை ஓரங்கள், செங்கடல் ஏல நிடிக்குடா (Aelantitie-gulf) வரை.

2 நிலவழி - தென் அரேபியா தொடங்கி அரேபியாவின் மேற்குக் கடற்கரை ஓரமாக நபாதியான் (Nabateans), பெத்ரா (Petra), காசா (Gaze), அல்லது சினை பெனின்சுலா (Sinai Peninsula) வழியாக எகிப்து வரை.

கி.மு. 170இல் டாலிடு எவர் கெட் (IV) மன்றத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சி கருதத்தக்கது. அரபிக்குடாவில் இருந்த ஓர் இந்தியரை அலெக்சாந்திரியாவிற்குக் கடத்தி வந்து அவருக்குக் கிரேக்க மொழி பயிற்றுவித்து இந்தியாவிற்குக் கடல் வழியைச் சொல்லுமாறு பணிக்கப்பட்டாராம். அதனைத் தொடர்ந்து கிரேக்க வாணிகக் கப்பல்கள் இந்தியாவிற்குப் பல முறை சென்று மதிப்பு வாய்ந்த பல பொருட்களுடன் திரும்பின.

பழங்காலத்தில் யவனர்கள் (கிரேக்கர்களும், உரோமர்களும்) மரக்கலங்களை நடுக்கடலில் செலுத்தி கடல்வழிப் பயணம் மேற்கொள்ளவில்லை. வழிகாட்டியின் துணையோடு கரையோரமாகவே மரக்கலங்களைச் செலுத்திப் பயணம் செய்தார்கள். இப்பயணமே அவர்களது உயிருக்கும் பொருளுக்கும் பாதுகாப்பாக இருந்தது.

எகிப்தரசி கிளியோபாட்ராவின் காலத்திலும் இவ்வாறே பயணம் மேற்கொண்டனர். இதனால் கரையோரமாகக் கப்பல் பயணம் செய்து இந்தியாவின் மேற்குக் கரையை (சேரநாட்டு-முசிறி) அடைய மிக நீண்ட காலம் ஆனது.

கி.பி. 47இல் ஹிப்பாலஸ் (Hippalus) என்னும் கிரேக்க மாலுமி தென்மேற்குப் பருவக்காற்றின் உதவியினால் அரபிக்கடலின் நடுவில் பிரயாணம் செய்து வெகு விரைவில் சேரநாட்டுத் துறைமுகத்துக்கு வந்தான். ஹிப்பாலஸ் என்னும் கிரேக்க மாலுமி கடலில், திசை, காற்று அறிந்து கப்பல் செலுத்துவதில் கிரேக்க மாலுமிகளுக்கு முன்னோடியாகத் திகழ்ந்ததால், அவன் நினைவாக தென்மேற்குப் பருவக்காற்றிற்கு, கிரேக்க மாலுமிகள் ஹிப்பாலஸ் பெயரையே சூட்டினர். ஹிப்பாலஸ் பருவகாற்று கண்டுபிடிக்கப்பட்ட பிறகு கிரேக்கர்கள் பழந்தமிழ் நாட்டிற்கு விரைவாக வந்து



வணிகம் புரிந்தனர்.

கி.பி. 23 முதல் கி.பி. 79 வரை வாழ்ந்த பிளினி என்னும் வெளிநாட்டார் செங்கடலிலிருந்து சேரநாட்டுத் துறைமுகமாக முசிறிக்கு மரக்கலங்கள் பயணம் மேற்கொண்டதைப் பின்வருமாறு குறிப்பிடுகிறார். இந்தியாவுக்குச் செல்லுகின்றவர்கள் ஓகெலிஸிலிருந்து புறப்படுவது வசதியானது. அந்த இடம் கெல்லா என்று வழங்கப்படுகிறது. அது ஒரு விரிகுடாவாகும். அங்கிருந்து ஹிப்பாலஸ் பருவக்காற்றின் துணையால் நாற்பது நாள் பயணத்தால் இந்தியாவின் முதன்மை வாய்ந்த வணிகத் துறைமுகப் பட்டினமாகிய முசிறியை அடையலாம்.

கிரேக்கத்திற்கும் பழந்தமிழகத்திற்கும் இடையே நிகழ்ந்த வணிகத்தை உற்று நோக்கும் போது பின்வரும் முடிவுக்கு வரலாம். ஓகலீஸிலிருந்து (கெல்லாவிலிருந்து) புறப்படும் கிரேக்கர்களின் மரக்கலங்கள் ஹிப்பாலஸ் பருவக்காற்றின் துணையால் (அரபிக்கடலில் தென் மேற்காகப் பருவக்காற்று வீசும் காலம் - ஏப்ரல் மாதத்திலிருந்து அக்டோபர் வரை வடகிழக்காக வீசும் காலம் - அக்டோபரிலிருந்து ஏப்ரல் வரை) 40 நாட்களில் பழந்தமிழகத்தின் முதல் வணிகச் சந்தையாக விளங்கிய முசிறிப்பட்டினத்தை அடைந்தன. பின்பு மரக்கலங்கள் எகிப்து நாட்டின் மெசிர் மாதத்தில் அதாவது ஜனவரி மாதத்தில் அரபிக் கடலிலிருந்து வடகிழக்குப் பருவக்காற்று வீசும் காலத்தில் புறப்பட்டு செங்கடலை அடைகின்றன. செங்கடலை அடைந்ததும் தென்மேற்கு அல்லது தென்கிழக்காக வீசும் பருவக்காற்றின் மூலம் புறப்பட்ட இடத்தை அடைகின்றன.

இஞ்சி, எண்ணெய், தேங்காய், தேக்கு, அரிசி, இலவங்கம், யானைத் தந்தம் முதலியப் பொருட்களை கிரேக்கர்கள் பழந்தமிழர்களிடமிருந்து விரும்பி வாங்கினார். கிரேக்கர்கள் தமிழகத்துடன் வணிகத்தில் இறங்கியது கி.மு.5ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தான். இவ்வணிகத் தொடர்பால் தமிழ்ச் சொற்கள் பல கிரேக்க மொழியில் இடம் பெற்றுள்ளன.

| தமிழ் | கிரேக்கம் |
|---|---|
| அரிசி | *Oryza* |
| கருவா (இலவங்கம்) | *Karpion* (கார்ப்பியன்) |
| இஞ்சிவேர் | *Zingibers* |
| பிப்பாலி | *Perperi* பெர்பெரி |

சோபோகிளிப்ஸ், அரிஸ்டோபேனிஸ் முதலிய கிரேக்க அறிஞர்களின் நூல்களில் இவற்றைக் காணலாம்.

இதேபோல கிரேக்க சொற்களும் தமிழ் மொழியில் இடம் பெற்றுள்ளன. (எ.கா.)

| கிரேக்கம் | தமிழ் |
|---|---|
| மத்திகை | சாட்டை |
| சுருங்கை | தரைக்குள் செல்லும் வழி |
| கன்னல் | நாழிவட்டில் |
| ஓரை | இரண்டரை நாழி |

தமிழகத்துடன் கிரேக்கம் கொண்ட நேரடித் தொடர்பால் அதுவரை வணிக இடைத்தரகராய் செயல்பட்டு வந்த அரேபிய வணிகர் இடத்தைக் கிரேக்கர்கள் கைப்பற்றிக் கொண்டனர்.

தமிழக உரோம வணிகம்

தமிழகத்திலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட வணிகப் பொருட்களின் பெருமையைக் கிரேக்கர்கள் மூலமாக உரோமர்கள் அறிந்து கொண்டனர். எனினும் கி.பிமுதலாம் நூற்றாண்டு வரையில் ரோமானியரின் வணிகம் பெருமளவில் விரிவடையவில்லை. ரோமானியர் மிகப் பெரும் கடற்படையை வைத்திருந்தாலும் கிரேக்கர்களைப் போன்ற சிறந்த கப்பலோட்டிகள் கிடையாது. உரோமானிய ஆட்சிக் காலத்திலும் கிரேக்கர்களே மிகச்சிறந்த கடலோடிகளாகவும், கடல் வணிகர்களாகவும் திகழ்ந்தனர்.

கி.மு. 30இல் மத்தியத் தரைக்கடலைச் சார்ந்த நாடுகளை உரோமப் பேரரசர் அகஸ்டஸ் வென்றார். உரோமானிய ஆட்சியின் போதும் அரேபியர் செங்கடல் வழியாக எகிப்து, கிழக்கு ஆப்பிரிக்கா முதலிய நாடுகளில் வணிகம் புரிந்து வந்தனர். பின்னர் உரோமர்கள் அரேபியரின் வணிகத்தைத் தடுத்து செங்கடல் பகுதி துறைமுகங்களைத் தங்கள் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வந்தனர். உரோமானிய ஆட்சிக்குக் கீழ் அடங்கிய துறைமுகப்பட்டினங்களில் மேற்பார்வையாளர்களாகவும், மரக்கல ஓட்டிகளாகவும்

கிரேக்கர்களை நியமித்தனர்.

உரோமானியப் பேரரசர் அகஸ்டஸ் சக்கரவர்த்தியின் எகிப்து வெற்றி (கி.மு.30இல்) உரோமர்கள் பழந்தமிழகத்துடன் நேரடியாக வணிகத் தொடர்பு கொள்ள வழி வகுத்தது. கிறிஸ்தவ ஆண்டு தொடங்கிய முதல் சில நூற்றாண்டுகளில் தமிழகத்துக்கும் உரோமாபுரிக்கும் இடையே வணிகம் பெருமளவில் வளர்ந்து வரலாயிற்று. தமிழகத்துடன் உரோமர்கள் மேற்கொண்ட வணிகத்திற்கு ரோமானியப் பேரரசர் அகஸ்டஸ்சும் மிகுந்த ஆதரவளித்தார். ரோமானிய அரசியல் வரலாற்றில் முதல் பேரரசராகக் கருதப்படுபவர் அகஸ்டஸ் மன்னராவார். இப்பேரரசர் காலத்தில் அநேக இந்தியத் தூதர்கள் உரோமை அடைந்து பல வகையில் வணிக உறவினை வளர்த்தனர். இதில் தமிழ்நாட்டுத் தூதுவர்களும் அடங்குவர்.

உரோமருடன் அரசியல் தொடர்பு கொள்வதிலுள்ள நலன்களை முதன் முதல் கண்டுணர்ந்தவன் ஒரு பாண்டிய அரசனேயாவான். உரோமர் நேசநாட்டினனாகும் எண்ணத்துடன் அவன் அகஸ்டஸ் ஸீஸரிடம் இரண்டு தூதுக் குழுக்கள் அனுப்பினான். இவற்றுள் ஒன்று ஜூலியஸ் ஸீசர் மாண்ட 18ஆம் ஆண்டில் (கி.மு.26இல்) அகஸ்டஸ் டெராகோனாவில் (Terracona) தங்கியிருக்கும் சமயம் அவனைச் சென்று கண்டது மற்றது ஆறு ஆண்டுகளுக்குப் பின் (கி.மு.20இல்) அவர் சாமாஸ் தீவிலிருக்கும் போது அவரைச் சந்தித்தது.

தமிழ்நாட்டில் உரோமர்கள்

மேற்காசியாவிலிருந்து வந்த கிரேக்க உரோம வணிகர்களைத் தமிழ் இலக்கியங்கள் "யவனர்கள்" என்று குறிப்பிடுகின்றன. யவனர் என்னும் இச்சொல் ஐஓனிஸ் (Iaones) என்னும் கிரேக்கச் சொல்லிலிருந்து திரிந்து வந்தது. வடமொழிக் கவிதையிற் பெரும்பாலும் கிரேக்கரை உணர்த்தவே இச்சொல் வழங்கும். தமிழ்க் கவிதையில் உரோமர், கிரேக்கர், உட்பட மேலைத் தேசத்தவர் யாவரையும் குறிக்கும்.

உரோமர்கள் வணிகத்தின் காரணமாக தங்களுடைய மரக்கலங்களைக் கடற்கொள்ளையரிடமிருந்து காப்பாற்றிக் கொள்ளும் பொருட்டு நன்கு பயிற்சி பெற்ற உரோமானியப் போர்வீரர்கள் பலரைத் தமிழகத்திற்குத் தங்களுடன் அழைத்து வந்தனர். அக்காலத்தில் முசிறித் துறைமுகத்தின் சுற்றுப் பகுதியில் கடற்கொள்ளையர்களின் நடமாட்டம் அதிகம். வாணிபத்தைப் பாதுகாக்கும் பொருட்டு அங்கு 1200 ரோமானிய வீரரடங்கிய படை ஒன்று (கி.பி. மூன்றாம் நூற்றாண்டில்) நிறுத்தப்பட்டிருந்தது என்றும் பண்டைய ரோமில் அரசவழிபாட்டுமுறை இருந்ததாகையால், முசிறியில் பேரரசர் அகஸ்ட்டஸ்சீசருக்கு ஒரு கோயில் கட்டப்பட்டிருந்தது.

முசிறியில் நிறுத்தப்பட்டிருந்த ரோமானிய படை கோஹார்ட் என்று அழைக்கப்படுகிறது. இப்படையில் 800லிருந்து 1200 பேர் வரை வீரர்கள் இருந்தனர். முசிறியில் இருந்த அகஸ்டஸ் சீசர் கோயில் கி.பி.1341ல் பெய்த பெருமழையின் காரணமாகப் பேரியாற்றில் ஏற்பட்ட வெள்ளப் பெருக்கால் அழிந்துபோனது.

வணிகத்தின் பொருட்டு தமிழகத்தில் தங்கிவிட்ட உரோமானியர்கள் தமிழக அரச சேவையை மேற்கொண்டு அரசர்களுக்கு மெய்க்காப்பாளர்களாகவும், அரண்மனை காவல்காரர்களாகவும், இராணுவப் பாசறைக் காவலர்களாகவும் அமர்ந்தனர். மதுரையின் கோட்டை வாயிலை ரோமானியப் போர் வீரர்கள் காவல் காத்ததைச் சிலம்பு

"சுருங்கை வீதி மருங்கிற் போகிக்
கடிமதில வாயில் காவலிற் சிறந்த
அடல்வாள் யவனர்க்கு அயிராது புக்கு; ஆங்கு" (சில. 14:65-67)
எனக் குறிப்பிடுகிறது.

முல்லைப்பாட்டு பாண்டிய அரசனின் இராணுவப் பாசறைக்காவலர்களாகவும், மெய்க்காப்பாளர்களாகவும் விளங்கிய உரோமானியரை,


அகஸ்தஸ் கோவில், வெளிநாடு

"வலிபுணர் காக்கை வன்கண் யவனர்
... ... ... ... .... .... ... ... .... .... .... ..... ..... ...
உடம்பின் உரைக்கும் உரையா நாவின்
படம்புகு மிலேச்சர் உழையர் ஆக" (முல்.61-66)
எனக் குறிப்பிடுகிறது.

சோழநாட்டுப் புகார் நகரில் யவனச்சேரி இருந்ததைச் சிலம்பு

"கயவாய் மருங்கிற காண்போர்த் தடுக்கும்
பயன்அறவு அறியா யவனர் இருக்கையும்;" (சில.5:9-1)
எனக் குறிப்பிடுகிறது.

ஏற்றுமதி இறக்குமதிப் பொருட்கள்

உரோமர்கள் தமிழகத்திலிருந்து, யானைத் தந்தம், எருமை நெய், விலங்கின் தோல், ஆமை ஓடு, மிளகு, மலபத்திரம், வெட்டிவேர் (நறுமண இலை), தேக்கு, சந்தனம், மயில் தோகை, கருங்காலி, இஞ்சி, இலவங்கம், தேங்காய் எண்ணெய், அரிசி, சோளம், புளி, வெற்றிலை, பாக்கு முதலியப் பொருட்களை ஏற்றுமதி செய்தனர். கிளி, குரங்கு தவிர மற்ற பறவைகளும், வேட்டை நாய், யானை, சிங்கம், காண்டாமிருகம், கோதுமை நிறமுள்ள ஒரு விஷப்பாம்பு, சிறிய மலைப் பாம்பு ஆகியனவும் ரோம நாட்டிற்கு அனுப்பிவைக்கப்பட்டன.

ரோமானியர்கள் ஒயினையும் (தேறல்), பொன், அரிய மட்பாண்டங்கள், வெள்ளீயம், ஈயம், வெண்கலம், பவளம், எகிப்தியத் துணிகள் போன்றவற்றைத் தமிழகத்தில் இறக்குமதி செய்தனர். ரோமர்கள், இறக்குமதி செய்தப் பொருட்களைக் காட்டிலும் தமிழகத்திலிருந்து ஏற்றுமதி செய்த பொருட்களே அதிகம். ரோமர்கள் தமிழகத்துடன் பண்டமாற்று வாணிகம் புரியவில்லை. பொன்னைக் கொடுத்துப் பொருட்களை வாங்கிச் சென்றார்கள். இதனால் உரோமாபுரியிலிருந்த அறிஞர்கள் தங்களது செனட்டில் வணிகத்தின் மூலமாக தமது நாட்டின் செல்வம் வெளிநாடுகளுக்குச் செல்வதை முறையிட்டிருக்கிறார்கள்.

உரோம நாட்டு அரசியல்வாதியும் எழுத்தாளருமான பிளைனி கூறுவது : எவ்வளவு குறைவாக மதிப்பிட்டாலும் இந்தியா, சேரநாடு மற்றும் அரசு நாடுகள் ஆண்டுதோறும் உரோமப் பேரரசிலிருந்து 10 கோடி உரோம நாணயம் செஸ்டெர்ஸஸ் (Sesterces)ஐ வடித்துவிடுகின்றன எனக் குறைப்பட்டுக் கொள்கிறார்.

தமிழக ரோம் வாணிகத்தால் ஆண்டுக்கு 100 ஆயிரம் பொன் நாணயங்கள் தமிழகத்திற்கு வந்தன. உரோம் நாட்டுப் பொன் தமிழகம் செல்வதைத் தடுக்க உரோமப் பேரரசு சட்டம் இயற்றியதாகவும் கூறப்படுகிறது. இச்சட்டத்தைக் கொண்டு வந்தவன் கி.பி.68இல் மறைந்த நீரோ மன்னன் ஆவான்.

உரோமானியக் காசுகள்.

தமிழக உரோம் வாணிகத்திற்குச் சான்றாக உரோமானியக் காசுகள் பல தென்னகத்தில் கிடைத்துள்ளன. கேரளத்தில் இய்யல், கோட்டயம், கும்பளம், வழுவல்லி, பாலக்காடு, பூஞ்சர், தமிழகத்தில் கோவை, கரூர், மதுரை, தென்னாற்காடு, திருக்கோயிலூர், திருப்பூர், கொடுமணல் காவிரிப்பூம்பட்டினம், அழகன்குளம் என தென்னிந்தியாவின் பல இடங்களில் உரோமானிய நாணயங்கள் கிடைத்துள்ளன.

தமிழகத்தில் இதுவரை கிடைத்துள்ள ரோமானியக் காசுகள் தங்கம், வெள்ளி, செம்பு ஆகிய உலோகங்களில் கிடைத்துள்ளன. ஒரே ஒரு காசு மட்டும் ஈயத்தால் ஆனது. இக்காசு காவிரிப்பூம்பட்டினத்தில் கிடைத்தது. வெள்ளியால் ஆன காசுகள் தான் தமிழகத்தில் குறிப்பாக கோவை மாவட்டத்தில் அதிக அளவில் கிடைத்துள்ளன. தமிழகத்தில் கிடைத்துள்ள உரோமானியக் காசுகள் பலவற்றில் வெட்டுக்குறி காணப்படுகிறது. பொதுவாக இவ்வெட்டுக்குறி காசின் முன்புற தலைப்பகுதியில் காணப்படுகிறது. அகஸ்டஸ் முதல் நீரோ அரசர்கள் வெளியிட்ட காசுகளில் இவ்வெட்டுக் குறியைக் காணலாம். புதுக்கோட்டை, தொண்டைமாநத்தம், கலையம்புத்தூர் ஆகிய ஊர் புதையல்களில் கிடைத்த காசுகளில் இவ்வெட்டுக்குறி உள்ளது. வெட்டுக்குறி இடுவதன் நோக்கம் பற்றி ஒருமித்த கருத்து இல்லை. சிலர் தங்கள் தூய்மையைப் பரிசோதனை செய்வதற்காக இடப்பட்ட குறி என்பர். வேற்று நாட்டுக் காசை செலாவணியிலிருந்து தடுக்கவே இக்குறி இடப்பட்டது என்றும் வாதிடுவர்.

பழந்தமிழகத்துடன் ஏற்பட்ட வணிக உறவால் உரோம் நாட்டுக் காசுகள் தமிழகத்தில் காசு புழக்கத்தில் விடப்பட்டன. பொதுவாக உரோம் நாட்டுக் காசுகள் உரோமில் வெளியிடப்பட்ட காலத்திலேயே தமிழ் நாட்டில் காசு புழக்கத்திற்கு வந்தன என்று உறுதியாகக் கூறமுடியாது. பெருமளவு காசுகள் தமிழகத்தில் புதையலாகக் கிடைத்துள்ளதாலும் அப்புதையலில் பல அரசர்களது காலத்திய காசுகள் கலந்து கிடைப்பதால் இக்காசுகள் எந்த காலகட்டத்தில் தமிழகத்தை வந்தடைந்தன என்று தெளிவாகக் கூற இயலாது. இவையனைத்தையும் உற்று நோக்கும் போது கி.மு. இரண்டாம் நூற்றாண்டிலிருந்து கி.பி. நான்காம், ஐந்தாம் நூற்றாண்டு வரை உரோம் நாடு தமிழகத்துடன் மிக வளமானதொரு கடல் வணிகத் தொடர்பு கொண்டிருந்தது புலனாகிறது.

கி.பி. 147இல் ஹிப்பலாஸ் என்னும் கிரேக்க



துறைமுகம் வரும் ரோமானிய கப்பல்

மாலுமி தென்மேற்குப் பருவக்காற்றின் உதவியால் அரபிக்கடலின் நடுவில் பிரயாணம் செய்து 40 நாட்களில் சேரநாட்டுத் துறைமுகத்திற்கு வந்தான். அது முதல் கிரேக்கத்துடன் நேரடியாகத் தமிழகம் கடல் வணிகத் தொடர்பு கொண்டது. இஞ்சி, எண்ணெய், தேங்காய், தேக்கு, அரிசி, இலவங்கம், யானைத் தந்தம் முதலானப் பொருட்களை கிரேக்கர்கள் தமிழர்களிடமிருந்து வாங்கினர். தமிழக கிரேக்கக் கடல் வணிகத் தொடர்பால் தமிழ்ச் சொற்களான அரிசி (அரிஸா), கருவா (கார்ப்பியன்), இஞ்சி (சின்ஞிபேராஸ்), பிப்பாலி (பெர்ப்பெரி) முதலிய கிரேக்க மொழிகளுக்குச் சென்றன. அதேபோல கிரேக்கச் சொற்களான மத்திகை (சாட்டை), சுருங்கை (தரைக்குள் செல்லும் வழி), கன்னல் (நாழி வட்டில்), ஓரை (இரண்டரை நாழி) போன்றவை தமிழ் மொழிக்கு வந்தன.

பழந்தமிழகத்திலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட வணிகப் பொருட்களை கிரேக்கர்களின் வாயிலாக அறிந்து கொண்ட உரோமர்கள் அது முதல் தமிழகத்துடன் கடல் வணிகத் தொடர்பு கொள்ள ஆரம்பித்தனர்.

ரோமானியர்கள் ஒயின் (தேறல்), பொன், அரிய மண்பாண்டங்கள், வெள்ளீயம், ஈயம், வெண்கலம், பவழம், எகிப்திய துணிகள் முதலியவற்றைத் தமிழகத்தில் இறக்குமதி செய்தனர். தமிழகத்திலிருந்து யானைத்தந்தம், எருமை நெய், விலங்கின் தோல், ஆமை ஓடு, மிளகு, மலபத்திரம், வெட்டிவேர், தேக்கு, சந்தனம், மயில்தோகை, கருங்காலி, இஞ்சி, இலவங்கம், அரிசி, சோளம், புளி, வெற்றிலை, பாக்கு, கிளி, குரங்கு, வேட்டை நாய், யானை, சிங்கம், காண்டாமிருகம் ஆகியவற்றை ஏற்றுமதி செய்தனர்.

வணிகத்தின் பொருட்டு தமிழகம் வந்த உரோமானியர்கள் தமிழக மன்னர்களுக்கு மெய்க்காப்பாளராகவும் விளங்கினர். தமிழகக் கோட்டைகளில் உரோமப் பொறிகள் பொருத்தப்பட்டன. முசிறியில் வணிகத்தின் பொருட்டு உரோமானியப் படை ஒன்று பழங்காலத்தில் நிறுத்தப்பட்டிருந்தது. அங்கே அகஸ்டஸ் சீசருக்குக் கோயில் ஒன்றும் எழுப்பப்பட்டிருந்தது. பொதுவாகக் கிரேக்க உரோமர்களை தமிழ் இலக்கியங்கள் யவனர்கள் என்று குறிப்பிடுகின்றன. தமிழகம் கொண்ட வாணிப உறவை மெய்ப்பிக்கும் வகையில் தமிழகத்தின் பலவிடங்களில் கிரேக்க உரோமானிய நாணயங்கள் கிடைத்துள்ளன.





# மறைந்திருக்கும் அழகு – புளியஞ்சோலை

– இளங்கோவன்





பெரம்பலூர் மாவட்டம், துறையூரிலிருந்து கிளம்பும் நமது பயணம் சுமார் 25 கிமீ தூரம் தொடர்கின்றது. எவ்விடத்திலிருந்து பார்த்தாலும் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் பசுமை. மனதை மயக்கும் இனிய மணம். கரும்பஞ்சாறு காய்ச்சும் இனிய மணம் ஒரு புறம், திரும்பும் திசையெல்லாம் மூடி வைக்கப்பட்டிருக்கும் வெங்காய மணம் மறுபுறம், கண்ணுக்கெட்டிய தூரம் வரை பசுமை பசுமை பசுமையைத் தவிர வேறில்லை.

செல்லும் வழியிலேயே நம்முடன் தொடர்ந்து ஓடி வருகின்றது ஓர் ஓடை. சில்லென்ற இனிய காற்று கொளுத்தும் கோடையைத் தணிக்கின்றது. மண்வாசம் வீசும் அழகிய சிற்றூர்கள், பேருந்து வசதியை ஒரு நாளில் எப்போதேனும் ஒரு முறை மட்டுமே காண்கின்ற, சுற்றுச் சூழல் கலையாத, இயற்கை அழகு குன்றாத மண்மகள் தன் மேனியில் மாசுபடாமல் காத்து வைத்திருக்கும் பொக்கிஷம் போன்ற சின்னஞ்சிறு குக்கிராமப் பகுதிகள். இன்னும் அருகே செல்கின்றோம்.

சலசலவென்று நதிப் பெண்ணாள் தன் கால் சிலம்பொலிக்க ஓடுகின்றாள். வானளாவிய பெரும் புளியமரக்கூட்டம். சிறுசிறு பலா மரங்களில் பெரும் பெரும் பழங்கள். மூலிகை மணத்துடன் கூடிய இளமென் காற்று நம் இதயத்தை மட்டுமல்ல உடலையும் வருடிச் செல்கின்றது. ஆ! கண்டுவிட்டோம். ஓர் மாட்டுவண்டி மட்டுமே செல்லக்கூடிய சிறுபாதையில் நமது வாகனம் பயணிக்கின்றது.

இயற்கை அழகை ரசிக்க மட்டும் மனிதன் விட்டுவிட்டால்? மறிக்கின்றனர் சுற்றுலாத் துறையினர். பணத்தைக் கொடுத்துவிட்டு உள்ளே நுழைகின்றோம். ஹாஹ்ஹா இதுதான் புளியஞ்சோலையா? பிரமிக்கின்றோம். மனித வாடையே படாத கன்னி நிலம் இதுதானோ! செயற்கை என்னும் ஒரு சிறு நச்சும் படாத அழகிய பூமி. சுற்றும்முற்றும் பார்க்கின்றோம். எங்கு நோக்கினும் ஓங்கி உயர்ந்த மலைகள். மலை முற்றும் பசுமரங்கள், செடிகள், கொடிகள். தரை எங்கும் சிறிய கிரிக்கெட் பந்தின் அளவிலிருந்து பெரும் பூதாகர வடிவம் கொண்ட உருண்டைப் பாறைகள். நடக்க நடக்க காலுக்குச் சுகம். ஆனால் சிறிது தவறினாலும் விழுந்து மண்டை உடைபட வாய்ப்புண்டு. பயணிகளே ஜாக்கிரதை.

அடடா அடடா இதென்ன அநியாயம்? அழகிய உருளைக்கற்களின் நடுவே உடைபட்ட பாட்டில்கள், கிழிப்பட்ட பிளாஸ்டிக் குப்பைகள். சீச்சி இந்த இடத்தையும் இப்படிச் செய்ய எப்படித்தான் மனம் வருகின்றது மனிதா? என்று கேட்கத் தோன்றுகிறது. பளிங்கினைப் போன்ற நீரோட்டம் மனதை மகிழ்விக்கின்றது. அடியிலிருக்கும் பாறைகள் கூட நம் கண்களுக்குத் தென்படும் வகையில் தெளிவான நீர். அதில் காலை எடுத்து வைக்கும் போது ஏற்படும் உணர்வு, குளிர்ச்சி மகிழ்ச்சி. தடால் தடால் சத்தத்தைக் கேட்டு தூக்கி வாரிப்போடுகின்றது நமக்கு. ஆங்காங்கே துணி துவைக்கும் ஓசை. பளிங்கு நீரில் கலந்து வரும் சோப்பு நுரையும் அழுக்கும். இயற்கை அழும் ஓசை கேட்டு நமது கண்ணீரும் ஓடும் தண்ணீரில் கரைகின்றது.

சிலுசிலுக்கும் ஓடையில் திடப்படுத்திக்கொண்டு ஆழமில்லாப் பகுதியில் காலை விட்டவுடன் அப்பப்பா! தடாலென்று தலைகுப்புறக் கவிழ்கின்றோம். ஆளுயரப் பள்ளத்தில். நிமிர்ந்து பார்த்தால் எங்கும் ஜலமயம். மூக்கிலும் வாயிலும் தண்ணீர் வழியே முட்டி மோதி வெளியே வருகின்றோம். சிறு ஆழம் குறைந்த பகுதியில் நீச்சல் அடிக்கத் தொடங்குகின்றோம்.

அப்பாடா என்ன சுகம்? என்ன சுகம்? உன்னிடம் நான் கண்ட சுகம்? என்று ஓடும் நீரைப் பார்த்துப் பாடத் தோன்றுகின்றது.

நேரம் கழிய கழிய ஆரம்பச் சுகம் குறைய, களைப்பு மேலிட ஆழம் குறைந்த பகுதியில் படுத்தப்படி சுகம் பெறத் தொடங்கினோம். தலைமீது வழிந்தோடும் நீரால் நம் பாவங்கள் கழிகின்றதோ இல்லையோ அழுக்கு தீர்ந்த ஆனந்தம் பிறப்பதென்னவோ நிஜம். குறைந்த ஆழம் நம் மனதை நிறையச் செய்த பின்னே இன்னும் சற்று தூரம் உள்ளே சென்று பார்க்கலாம் என்று தோன்றியது. இன்னும் சற்று தூரம் உள்ளே செல்லத் தொடங்கினோம். இயற்கை அன்னையின் களிநடமா? பிரகிருதி தேவியின் பூரண அழகை ரசித்துச் செல்லச் செல்ல ஆச்சரியத்தில் மூழ்கினோம். உலர்ந்த பாறைகளில் ஏறினால் கொதிக்கும் கால்கள், அருகிலேயே இருக்கும் அருவிக் கால்களில் காலை நனைக்க நனைக்க உயிரை உருக்கும் குளிரில் மூழ்கிடும் விந்தைதான் என்னே! என்னே!! இயற்கை நாட்டியமாடும் சோலை என்றால் அது இந்தப் புளியஞ்சோலைதானோ என்ற எண்ணம் உள்ளத்தில் ஊறுகின்றது.

சுமார் பத்து நிமிடம் ஆதிமனிதனைப் போன்ற நடை, பாறைகளில் தாவித் தாவி கைகளையும், கால்களையும் சர்க்கஸ் நாட்டியக்காரி போல நடந்து சென்றவுடன் பிரமிப்பின் எல்லையை அடைகின்றோம். ஓவென்று ஓடிவரும் நாதவெள்ளம். உள்ளத்தையும் உடலையும் குளிரச்செய்யும் ஆனந்த வெள்ளம். குளிரருவியின் விந்தையில் குளிக்கின்றது நம் சிந்தை. கூடி வருகின்றது மக்கள் மந்தை. இனிமை, சுகம், ஆனந்தம், சந்தோஷம், மகிழ்ச்சி, உற்சாகம், இன்பம் இன்னும் என்னென்ன சொற்கள் உண்டோ அனைத்துச் சொற்களையும் சொல்ல மட்டுமல்ல அனுபவிக்கவும் முடியும் இடம் அந்த ஆனந்த வனம்.

உடலுக்கும் அந்த அனுபவம் முடிந்தவுடன் சிறிது வயிற்றுக்கும் ஈந்துவிட்டு, மீண்டும் நீரில் இறங்குகிறோம். எங்கேயிருக்கின்றது இந்த இடம் என்கிறீர்களா? பெரம்பலூர் மாவட்டம் துறையூரிலிருந்து கிளம்பும் நமது பயணம் சுமார் 25 கிமீ தூரத்திலிருக்கின்றது புளியஞ்சோலை என்ற இந்த அழகிய சுற்றுலாத் தலம். உணவையும் உடையையும் கையோடு கொண்டு செல்வது நலம். அங்கு உணவகங்கள் எதுவும் கிடையாது. நகர வாழ்வில் வெறுத்துப் போயிருப்பவர்கள் ஒரு நாள் இன்பச் சுற்றுலாவாக இங்குச் சென்று வரலாம். பெரம்பலூரிலிருந்தும், துறையூரிலிருந்தும் பேருந்து வசதி இருக்கின்றது என்றாலும் ஒரு குழுவினராக சுற்றுலா வாகனங்களில் செல்வதே நமக்குச் சௌகரியம்.

என்ன புளியஞ்சோலைக்குப் புறப்பட்டுவிட்டீர்களா?

## காசும் பணமும்



காசு, காணம், பொன் போன்ற தொடர்கள் சங்க காலம் முதற்கொண்டே பயின்று வந்துள்ளன. சங்க இலக்கியத்தில் பயின்று வருகின்ற காசு என்ற சொல் நாணத்தைக் குறிக்கவில்லை.

இவை பெரும்பாலும் காழ் பெயல் அல்குல் காசு என்று அணிகலன் தொடர்பு கொண்டு வருகிறது. காணம், பொன் இவ்விரு பதங்களும் நாணயங்களைக் குறிக்க பயன்பட்டுள்ளன. அக்கால மக்கள் நாணயமாற்றைவிட பண்டமாற்றையே அதிகம் விரும்பி உள்ளனர் என்பதற்கு பெரும்பாணாற்றுப்படை பாடல் வரிகள் சான்றாக உள்ளன. *CASH* எனும் சொல்லுக்கும் "காசு" என்ற சொல்லுக்கும் ஒலி ஒற்றுமை உள்ளது.

"ஆய்மகள் நெய் விலைக் கட்டிப் பசும்பொன் கொள்ளாள். எருமை நல்லான் கருநாகு பொறூஉம்"

நெய்யிற்கு விலையாக பசும் பொற்கட்டிகளை கொடுத்தால்கூட வாங்காத ஆய்மகள் எருமை, பசு இவற்றையே ஏற்பாள் என்பதிலிருந்து, இச்சூழலில் பண்டமாற்றே பெரிதும் வழக்கிலிருந்ததால் நாணயமாற்றுக் குறித்து கூறும் தேவை அவர்களுக்கு இல்லாதிருந்திருக்கலாம். மேலும், இப்பாடல் வரியில் கட்டிபசும்பொன் என்பதும் குறிப்பிடத்தக்கது. இடைக் காலத்தில் கழஞ்சு எடையில் கொடுக்கப்பட்டிருக்கும் பொன் வகை நாணயங்கள் கட்டிகளாகவே இருந்திருக்கும் என்ற கருத்திற்கு சங்ககாலம் தொட்டே இக்கட்டிகள் பரிவர்த்தனையில் பயன்பட்டுள்ளமை துணை நிற்கின்றன.

# யுவாங் சுவாங் – பயணி

– Ar. வித்யா லட்சுமி



பயணம் என்பது மிகச் சுவையான அனுபவம். அது ஊரைச் சுற்றுதல் மட்டுமல்ல, தன் நிலை புரிதல். நம்முடைய எல்லாச் சுகங்களையும் விட்டு, பயணிக்கத் துவங்குவது என்பது, மிகப்பெரிய சவால். அந்தச் சவாலை பல நூற்றாண்டுகளுக்கு முன்பு எதிர்கொண்டவர்களை பற்றிய பதிவு இது. இன்றைய கால கட்டத்தில், நமக்குப் பல வழிகாட்டிகள் உள்ளார்கள், பல இணையதளங்கள், கூகிள் மேப்ஸ், ஜி.பி.எஸ் வசதி போன்ற பல உள்ளன. அவை நாம் சரியான பாதையில், நம் இலக்கை நோக்கிச் செல்கிறோமா என்பதை உறுதிப்படுத்துகின்றன.

அப்படியான பல பயணிகள் இந்த உலகத்தில், முன்னோடிகளாய் உள்ளார்கள். அவர்கள் ஏதோ ஒரு காரணத்திற்காக மொழி, மக்கள், வழி, வாழ்வியல் முறை தெரியாத ஊர்களுக்குப் பயணப்பட்டு இந்த உலகிற்குப் பல சுவாரஸ்யமான விசயங்களை வெளிக்கொணர்ந்தனர். அவர்களில் ஒருவரான, யுவான் சுவாங் பற்றி அறிந்துகொள்வோம். யுவான் ஒரு சீன புத்த துறவி, கல்வியாளர், மொழிபெயர்ப்பாளர் மற்றும் பயணி. இவர் ஏழாம் நூற்றாண்டில் இந்தியாவிற்குப் பயணித்து சீன - இந்திய புத்த மதத்தில் இருந்த தொடர்புகளை அறிய எண்ணினார்.

இவருடைய பயணத்தில் இவர் இந்தியாவில் உள்ள புத்த தலங்களுக்குச் சென்றார். இவருடைய பதிமூன்றாவது வயதில் இவருடைய கல்வியறிவு மற்றும் புத்த மதம் மீது இவர் கொண்ட பற்றால் "துறவி" என்ற நிலையை அடைந்திருந்தார். சூய் பேரரசில் ஏற்பட்ட குழப்பங்கள் காரணமாக இவர் சீனா முழுவதும் பயணித்து, புத்த மதம் பற்றிய அரிய நூல்களைச் சேகரித்தார். அதன் பிறகு இந்தியாவிற்குப் பயணிக்கும் ஆசை கொண்டார்.

ஆனால், அக்காலத்தில் வெளிநாடுகளுக்குச் செல்ல, தாங் பேரரசில் தடைவிதிக்கப்பட்டிருந்தது. ஆனால் தடையை மீறி சுவாங் ராஜ்யத்தை விட்டு வெளியேறினார். அவர் பயணம், மிகுந்த இடர்பாடுகளைத் தாண்டி வரவேண்டியதாய் இருந்தது. பல மலைகளையும், பாலைவனங்களையும் கடந்தார். தன் பொருட்களை எல்லாம் கொள்ளையர்களிடம் பறிகொடுத்தார். மேற்கு நோக்கிப் பயணிக்க துவங்கிய அவர், ஆப்கானிஸ்தானில் பல புத்த விஹாரங்களை கண்ட பிறகு காந்தாரத்தை அடைந்தார்.

அங்கிருந்து தக்கசீலத்திற்கு சென்று அங்கிருக்கும் ஸ்தூபிகளைக் கண்டார். காஷ்மீரத்திற்கு சென்று அங்கு நடந்த பதவி சண்டைகளைக் கண்டார். லாகூர், பஞ்சாப், மதுரா போன்ற இடங்களுக்குப் பயணப்பட்டார். அங்கிருந்து கங்கை கரையைக் கடந்து பயணித்தார், கோசம் தேசத்தில் இருந்த புத்த அமைப்பை படி எடுத்துக்கொண்டார்.

அங்கிருந்து நேபாளத்திற்குச் சென்ற அவர், கபிலவஸ்தத்திற்கு சென்று புத்தரின் பிறப்பிடத்தைக் கண்டார். அங்கிருந்து புத்தர் மறைந்த இடமான குசிநகரத்திற்கு சென்றார். பிறகு சாரநாத்தை அடைந்து அங்கிருந்து காசி, வைசாலி, பாடலிபுத்திரம்,

கயா போன்ற தலங்களை கண்டார். அங்கிருந்து உள்ளூர் துறவிகளை துணைக்கொண்டு நாளந்தா பல்கலைக்கழகத்தில் குறைந்தது இரண்டு வருடங்கள் இருந்தார். அங்குப் பல கலைகளை அவர் கற்றார்.

அங்கிருந்து வங்காளத்திற்குப் பயணப்பட்ட அவர், அங்குப் பல புத்த ஸ்தூபிகளையும், விஹாரங்களையும் கண்டார். அங்கிருந்து இன்னும் தெற்கில் பயணப்பட்டு அமராவதியையும், நாகர்ஜுனகொண்டாவையையும் கண்டார். அங்கு அவர் பல நூல்களைக் கற்றார். அங்கிருந்து காஞ்சியை அடைந்த அவர், அங்குப் பல்லவர்களின் தலைநகரத்தையும், அங்குப் புத்த மதம் தழைத்திருந்ததையும் கண்டார். மேலும் அஜந்தா குகைகள், நாசிக், மல்வா போன்ற இடங்களைக் கண்டு மீண்டும் நாளந்தா பல்கலைக்கழகத்தை அடைந்தார்.

அங்கிருந்து மீண்டும் வங்காளம் சென்று, மக்களின் கலாச்சாரம் மற்றும் பழக்க வழக்கங்களைப் பற்றி விவரித்தார். பிறகு ஹர்ஷவர்தனின் அழைப்பை ஏற்று, கும்ப மேளாவைக் காணப் பிரயாகைக்கு சென்றார்.அங்கிருந்து அவர் கிளம்பும் போது ஹர்ஷவர்தன் அவருக்குப் பல பரிசுகளை அளித்தான். அங்கிருத்து கைபர் வழியாக ஹிண்டுகுஷ்ஷை கடந்து சீனாவை அடைந்தார். கிட்டத்தட்ட பதினாறு வருடங்கள் இந்த பயணங்களைச் செய்ய அவர் எடுத்துக்கொண்டார்.

சில நாட்கள் பயணம் என்றாலே, நாம் எவ்வளவு பொருட்களை எடுத்துக்கொண்டு, எவ்வளவு ஏற்பாடுகள் செய்கிறோம்? ஆனால் இவரின் பயணம் மிகுந்த ஆச்சர்யத்தையும், அவர் கொண்ட அனுபவங்கள் சாகசம் நிறைந்ததாகவும் இருந்திருக்கும் என எண்ண வைக்கிறது. அந்தப் பயணத்தில் அவர் சேகரித்து எல்லாம் புத்தகங்கள் மற்றும் மக்களின் வாழ்வியல் முறைகள், பழக்க வழக்கங்கள் பற்றிய குறிப்புகளே அதிகம்.

ஒரு புதிய இடத்தை நோக்கிப் பயணப்பட்ட இன்னொருவரை பற்றி அடுத்த பதிவில் காண்போம்


யுவாங் சுவாங்கின் வீடு

## பயணி கடவுளான கதை



**இந்திய பயணத்தில் யுவான் சுவாங் சேகரித்தது எல்லாம் புத்தகங்கள் மட்டுமே. நாடு திரும்பிய பிறகு, அவருக்கு மந்திரி பதவி அளிப்பதாக கூறிய போதும், அதை ஏற்க மறுத்துவிட்டார்.**

**தாம் கொண்டு வந்த இந்திய நூல்களைச் சீன மொழியில் மொழிபெயர்ப்பதே தன் முக்கிய எண்ணம் என்று கூறி, அரசு உதவி செய்ய எண்ணினால் மொழி பெயர்க்க சீடர்களைத் தந்து உதவுமாறு கேட்டுக்கொண்டார். அப்படியே அரசும் அளிக்க, தாம் வாழ்நாளில் பெரும்பகுதியை மொழிபெயர்த்தலுக்காகச் செலவிட்டார்.**

**அவருடைய மண்டையோடு, சீனாவில் உள்ள *"Temple of great compassion"* இல் பாதுகாப்பாக வைத்து வழிபடப்பட்டது. அதை தலாய் லாமா அவர்கள் நாளந்தாவிற்கு பரிசாக அளித்தார். சில காலம் பட்னா அருங்காட்சியகத்தில் இருந்த அந்த மண்டைஓடு, நாளந்தாவில் புதிய கட்டிடம் கட்டியவுடன் அங்கு கொண்டு செல்லப்பட்டது.**

**இவரை அடிப்படையாக வைத்து, *"Tang Sanzang"* என்ற கதாப் பாத்திரத்தில் பல புனைவு நாவல்கள், நாடகங்கள் உருவாகப்பட்டன.**





# மல்லையில் ஓர் மரபுநடை

## – தமிழகன் ராஜசேகர்



மரபுநடை வரலாற்றில் ஆர்வமுள்ள அனைவரையும் இணைக்கும் ஓர் நிகழ்வாகும். இது ஒவ்வொரு பகுதியில் உள்ள வரலாற்றில் முக்கியமான நிகழ்வு நடந்த இடங்கள், தொல்லியல் சின்னங்கள், மக்கள் பண்பாட்டை எடுத்துரைக்கும் அடையாளங்கள், பழமையைப் பறைசாற்றும் கட்டடங்கள், கோவில்கள், இயற்கை சார்ந்த இடங்கள் ஆகியவற்றுக்கு ஏற்பாட்டாளர்கள் அழைத்துச் செல்கின்றனர்.

மரபுநடையின் நோக்கம் பண்பாட்டுச் சின்னங்களைச் சார்ந்து இயங்கக் கூடிய ஆராச்சியாளர்கள், சமூக வரலாற்றுச் செயற்பாட்டாளர்கள், அதிகாரிகள், மரபுசார் இயக்கங்கள் அவற்றின் பெருமை, வரலாற்று முக்கியத்துவம், ஆகியவற்றை மட்டும் கூறாமல் அவற்றைப் பாதுகாக்க எடுக்கப்படும் நடவடிக்கைகள் அதில் உள்ள சிக்கல்கள், மற்றும் மக்களும் அரசும் ஆற்றவேண்டிய கடமைகள் பற்றி மக்களுக்கு விழிப்புணர்வு ஊட்டுவதற்காக நடத்தப்படும் நிகழ்வாகும்.

திருக்கழுக்குன்றத்து இளைஞர்கள் இணைந்து ஐந்திணைக் காப்போம் என்ற குழுவை அமைத்து. தங்கள் ஊரின் தொல்லியல் அடையாளங்களை மீட்பது குறித்தும், அதன் முக்கியத்துவத்தை மக்களுக்கு எடுத்துரைக்கும் விதமாகவும், பல மரபுசார் செயல்பாடுகளை முன்னெடுத்து வருகின்றனர். அதில் ஒன்று தான் மல்லையில் ஏற்பாடு செய்திருந்த மரபுநடையாகும்.

விழாவுக்கான அழைப்பிதழ் *Whatsapp*ல் கிடைத்தவுடன் நிகழ்வு ஒருங்கிணைப்பாளரும், நமது இதழின் கட்டுரையாளருமான சகோ. ஷன்முகப்பிரியனை தொடர்புகொண்டோம். நிகழ்வு ஏற்பாடுகள் பற்றியும், காணச் செல்கின்ற இடங்கள் பற்றியும் நமக்குக் கூறினார்.

நிகழ்வு அன்று அதிகாலையில் சென்னை கோயம்பேடு பேருந்து நிலையத்தில் இருந்து பயணமானோம். கிழக்கு கடற்கரைச் சாலையில் மாரத்தான் ஓட்ட நிகழ்ச்சியால் பேருந்து மெதுவாகவே செல்ல நேர்ந்தது.

ஒரு வழியாக மல்லையை அடைந்ததும், நிகழ்ச்சி ஏற்பாட்டாளர்கள் ஒரு தன்னார்வலரை அனுப்பி நம்மை நிகழுவு துவங்கும் இடத்திற்கு அழைத்து வந்துவிட்டனர். காலை உணவு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. சுமார் *130* பேர் வரை இந்நிகழ்விற்கு வருகை புரிந்திருந்தனர்.



அதன் பின் அனைவரும், மூன்று குழுவாக ஐந்து ரதங்கள் இருக்கக்கூடிய இடத்திற்கு அழைத்துச்செல்லப்பட்டோம். அங்குத் தொல்லியல் மட்டும் கல்வெட்டு அறிஞர் திரு. இராமசந்திரன் அய்யா அவர்கள் ஐந்து ரதங்களின் தோற்றமும், பல்லவர் காலக் கலை எழுச்சிப் பற்றியும் நமக்கு விவரித்துக் கூறினார்.

ஒவ்வொரு இரதமாக அவர் விளக்கிக் கூறிய பொழுது அவற்றில் உள்ள எழுத்துக்கள், அதில் உள்ள கடவுளர் உருவங்கள் மற்றும் அதன் அமைப்புகள் பற்றி விளக்கினார். மேலும் சில வேறுபட்ட மாந்தர்களின் உருவங்களைக் காண்பித்துப் பல்லவர் காலத்தில் உள்ள பல்வேறு இன மக்களை எவ்வாறு வேறுபடுத்திக் காட்டி சிற்பங்களைச் செதுக்கியுள்ளனர் என்பதை விளக்கியது நிகழ்வில் பங்குகொண்ட அனைவருக்கும் வியப்பாக இருந்தது.

பின்பு அனைவரும், கடலையொட்டி அமைந்துள்ள, பல்லவர் காலக் கலங்கரை விளக்கம் மற்றும் மகிஷாசுரமர்தினி அமைந்த குடவரைக்கு வாகனத்தில் அழைத்துச் செல்லப்பட்டோம். அங்கு மரபுநடையின் மற்றுமொரு அறிஞர் திரு. மதுசூதனன் கலைச்செல்வன் எங்களுடன் இணைந்து கொண்டார். அவர் அந்தச் சிற்பம் அமைந்துள்ள மண்டபத்தின் கட்டடக்கலை பற்றியும் விளக்கினார்.

அங்கே அமைந்துள்ள மகிஷாசுரமர்த்தினியின் போர்க்கோலக் காட்சிகளை விரிவாக எடுத்துரைத்தார். எவ்வாறு சிற்பம், ஓவியக் கலையோடு ஒத்துப்போகின்றது என்பதைப் பற்றியும், தாக்கும் நிலையில் உள்ள துர்க்கையும், தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் திணறும் மகிஷாசுரனின் செயல்பாடுகளும் தத்ரூபமாக வரையப்பட்டிருந்ததைப் பற்றியும் விளக்கிக்கூறப்பட்டது .

அங்கே இருந்த முகட்டின் உச்சியில் அமைந்துள்ள கலங்கரை விளக்கத்துடன் கூடிய கோவிலும் அதன் பயன்பாடுகள் பற்றியும் கூறப்பட்டது. அதே பாதையில் பயணித்து அங்கே உள்ள குடைவரைகள், பாதி நிலையில் விடப்பட்ட பாறைகள் என அனைத்தும் பற்றியும் மரபு நடையில் கலந்துகொண்டோர் தங்கள் ஐயங்களைக் கேட்டுத் தெரிந்துகொண்டனர்.

எங்கள் கூட்டம் அப்படியே பூவராக மற்றும் கொற்றவை அமைந்துள்ள குடைவரையை நோக்கி நகர்ந்தது. அங்கு அமைந்துள்ள குகையின் கட்டடக்கலையின் காலம் மற்றும் உருவங்களின் வேறுபாடு ஆகியவை பற்றிக் கூறப்பட்டது. தூண்களின் அமைப்பை வைத்து எவ்வாறு காலத்தைக் கணிப்பது பற்றியும், சிற்பக்கலையில் உள்ள பல்லவர் படைப்புகள் என் தனித்துவமாகத் திகழ்கின்றன





என்பது பற்றியும் அங்கே பல நூறாண்டுகள் கழித்தும் எஞ்சியுள்ள வர்ணங்கள் பல்லவர்களின் ஓவியத் திறனுக்கு எடுத்துக்காட்டாகவும் உள்ளது பற்றி விவரிக்கப்பட்டது.

பின்பு அருகில் இருந்த கோவிலுக்கும் எங்களை அழைத்துச் சென்றனர். அங்கே தற்போது உள்ள கணபதிக்கும் அக்கோயிலுக்கும் உள்ள தொடர்புகள் பற்றியும், மல்லையில் உள்ள முழுமையான தனிக் கோவில் இதுவென்பதையும் அறிந்தோம்.

அதன் பின்பு மல்லையில் பெரிதும் அறிந்திடாத கோவிலான ஆதிவராகர் குடைவரைக் கோவிலுக்கு விரைந்தோம். இக்கோவில் மாமல்லையில் இன்றும் வழிபாட்டில் உள்ள ஒரு குடைவரைக் கோவிலாகும். இங்கே உள்ள சிற்பங்கள் கால மற்றும் மனித தீண்டுதலுக்கு ஆளாகாமல் சிற்பத் தொகுப்புகள் தெளிவாக இருந்தன. பல்லவர்கால அரசவம்சத்தினரின் தனி உருவங்களைச் சிற்பங்களாகக் கொண்ட கோவில் இதுவே.

திரும்பி வரும் வழியில் நான் கண்ட வித்தியாசமான காட்சி, சிறுமி ஒருவரின் கையில் பிராமி எழுத்துக்களுடன் கூடிய குறிப்புப் புத்தகத்தைக் கண்டோம். மல்லையில் ஏது பிராமி எழுத்துக்கள் என்ற சந்தேகம் எழுந்தது. அந்தச் சிறுமியிடம் கேட்டேன். அவர் நான்காம் வகுப்பு படிக்கும் ஆனந்தசபரி தனது வீட்டில் வாங்கிக் கொடுத்த தமிழி எனும் புத்தகத்தைப் படித்து, ஈராயிரம் ஆண்டுகள் பழமையான எழுத்துக்களைச் சரளமாக எழுதப்படிக்க ஆரம்பித்துள்ளார். அவர் கூறுவதை நீங்களே கேளுங்கள். அவரைப் பற்றித் தனிக் கட்டுரையாக விரைவில் காண்போம்...

மாலை வேளை நெருங்கிக்கொண்டே இருந்தது. எல்லோருக்குமே அர்ஜுன தபசு மற்றும் கடல் மல்லைக் கோவிலையும் கண்டுவிடவேண்டும் என்ற எண்ணத்திலேயே இருந்தோம்.

அர்ஜுனன் தபசு சிற்பத் தொகுப்பிற்கு முன்பு அனைவரும் கூடினோம். மல்லையில் மக்களும் அவர்கள் வரும் கனரக வாகனங்களும் மிக அருகே

வந்து செல்லக்கூடிய சாலையின் அருகிலேயே அமைந்துள்ளது இந்தச் சிற்பங்கள். புராண இதிகாசக் காட்சிகளை மையப்படுத்தி, மலையும் மக்களும் வாழ்ந்த ஒரு பகுதியை பின்புலமாகக் கொண்ட காட்சிகள் காலம், நேரம், மக்கள் செயல்பாடுகள் ஆகிய நுட்பமான காட்சிகள் செதுக்கப்பட்டிருப்பதை அறிஞர்கள் விளக்கிக்கூறினர்.

மாலை மங்கிய வேளையில், கடற்கரைக் கோவிலை நோக்கி அனைவரும், முன்னேறினோம். கடற்கரைக் கோவில் அமைவிடம் பற்றியும், காலமும் கடல் அலைகளாலும் சிதைக்கமுடியாத அக்கோவிலின் அதன் அகழாய்வுகள், புனரமைப்புகள் பற்றியும் விளக்கிக்கூறப்பட்டது.

பின்பு நிகழ்ச்சியை முன்னின்று நடத்திய அறிஞர்களுக்கு நினைவுப் பரிசுகளும், மரபு நடையில் கலந்துகொண்ட அனைவருக்கும் ஐந்திணைக் குழு சார்பாக அளிக்கப்பட்டது. வரலாற்று ஆர்வலர்களை, மல்லையின் காதலர்களை ஒருங்கிணைத்த குழுவுக்குப் பாராட்டுகளும் நன்றிகளும்...



# மின்னிதழ் வாசகர்களுக்கு
# ஒரு வேண்டுகோள்

**நமது மின்னிதழை தொடர்ந்து பெற**
**கீழ்கண்ட வாசகர் சேர்க்கை படிவத்தை பூர்த்தி செய்யுங்கள்.**

## https://goo.gl/YZMknG

**மின்னதழை உங்களுக்கு தெரிந்த**
**குழுக்கள் மற்றும் நண்பர்களுடன்**
**பகிர்ந்துக்கொள்ளுங்கள்.**



## உதவிக்கரம் அளிப்பீர்

*To Support Us*
*Click Here*

Click here to Subscribe

# மின்னிதழ் வாசகர்களுக்கு எங்கள் நன்றி!!!